# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...

டெலிவிஷன் தான் நம்பர் ஒன்!

KALKI ● 15.03.2009 ● ரூ.10.00 ● 96 பக்கங்கள்



மதுரை எம்.பி.யாகப் போட்டி!

- மு.க.அழகிரி பேட்டி

எல்லை மீறும் வழக்கறிஞர்கள்!

- பார் கவுன்சில் தலைவர்

இப்படி இணையணும் ...போலீஸும் - லாயரும்!



### தப்பாமல் பிறந்த பிள்ளை!

நடிகர் ஸ்ரீகாந்த், இப்போது இரட்டை சந்தோஷத்தில் இருக்கிறார். முதல் சந்தோஷம், அவருக்கு மகன் பிறந்திருப்பதுதான். இரண்டாவது, அவருடைய பிறந்த நாள் அன்றே பிறந்திருப்பதுதான். அதனால் மனிதர் மகனையே சுற்றிச் சுற்றி வருகிறாராம்!

### பக்தி ரூட்!

த்ரிஷாவை இப்போதெல்லாம் அடிக்கடி சாய்பாபா கோயிலில் பார்க்க முடிகிறதாம். சாய்பாபா பக்தை ஆன பிறகுதான், 'சர்வம்', தனுஷோடு ஒரு படம் என அடுத்த ரவுண்ட் க்ளிக் ஆனதாம்!

# சினி சிப்ஸ்

### ஸ்ட்ராங் நக்கல்!

நடிக்கச் சொல்லி ஏகப்பட்ட ஆஃபர் வருகிறதாம் இசையமைப்பாளர் ஸ்ரீகாந்த் தேவாவுக்கு. கோதாவுல இறங்கிட வேண்டியதுதானே என்று கேட்டால், 'என் பாடிதான் ஸ்ட்ராங், அஸ்திவாரம் கொஞ்சம் வீக். தயாரிப்பாளர்கள் ஆட்டம் கண்டுருவாங்க'ன்னு நக்கலடிக்கிறாராம்!

### ரீ-எக்ஸ்போர்ட்!

நாடக மேடையிலிருந்து வெள்ளித்திரைக்கு எக்ஸ்போர்ட் ஆன வியட்நாம் வீடு, இப்போது பேக்டூ ஸ்டேஜ் டிராமா. ஒய்.ஜி. எம்மின் சிவாஜி அபிமானமும் நாடகத்தோடு சேர்ந்து அரங்கேறுது.

### கே.பி.கம்ஸ் அகெய்ன்

கே.பி. திரும்பவும் நாடக மேடைக்கு வருகிறாராம் புத்தம் புதுத் தயாரிப்போடு. சென்னை சபாக்களின் வேண்டுகோளாம்.

## யம ஸ்பீடு!

**டைம்** கிடைக்கும் போதெல்லாம் நமீதா ஸ்பிளண்டர் பைக்கோடு ஈ.சி.ஆர். ரோட்டுக்குக் கிளம்பிவிடு வாராம். ஏனெனில் காலேஜ் டைம்ல யமஹாவுலதான் காலேஜுக்குப் போவாராம். அந்த டச் விட்டுப் போகக் கூடாதாம்!

## புது காம்பினேஷன்!

**க**மல்ஹாசனுடைய அடுத்த படத் துக்குக் கதை - வசனம் எழுதுபவர் இரா.முருகன். இத்தனை நாட்களாய் எப்படி விட்டு வைத்தார் கமல்?

# நியூஸ் பாய்

## கியா பாத் ஹை!

**ஏ**ற்கெனவே தமிழில் தேசப்பற்றுப் படங்களை இயக்கி தீவிரவாதிகளுடன் சண்டை போட்ட அர்ஜுன், இப்போது இந்தியில் ஒரு படம் பண்ணப் போகிறாராம். ஆனால் நடிப்பில்லையாம், ஒன்லி இயக்கம்!

## சிஷ்யனை மிஞ்சும் குரு!

“**சீ**மானை உள்ளே வைத்தால் என்ன? என்னைப் போன்றவர்கள் இருக்கிறார்கள் இலங்கைத் தமிழர் பிரச்னையைப் பேச” என்று தன் சீடனுக்காக மார்தட்டியிருக்கிறார் இயக்குநர் மணிவண்ணன்.




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்: **லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர்: **சீதா ரவி**

உதவி ஆசிரியர்: **கதிர்பாரதி**

வடிவமைப்பு:
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன், பா.கோபால்**

தொலைபேசி:
044 - 4343 8888 (30 lines)

தொலைநகல்: 044 - 4343 8899

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு:
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு:
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு:
subscription@kalkiweekly.com

பிற தகவல்கள்:
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி:
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு:
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-

வெளிநாடு (விமானத்தபால்):
ஒரு வருடம் : ரூ. 3,800/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# உடையழகு... நடையழகு...

ஸ்மார்ட், ஸ்டைல் அண்ட் ஸ்வீட்.... இது பெண்களுக்கு மட்டுமே பொருந்தும் வார்த்தைகளல்ல. இன்று பல இளைஞர்கள் படு ஸ்மார்ட்டான தோற்றத்தில் உலாவந்து பெண்களின் தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதே உண்மை. 'யூத் ஐகான்' என்று நாடே போற்றும் சில ஸ்மார்ட் அண்ட் ஸ்டைல் ஆண்களைப் பார்ப்போமா...

**ராகுல்காந்தி :** வெள்ளை வெளேரென்ற குர்தா-பைஜாமாவில் பளீரென்று மின்னும் ராகுல் காந்திக்கு ஒரு க்ளீன் இமேஜ்! பெரிய இடத்துப் பையனாக இருந்தாலும் அமேதியுலும் ராய்பரேலியிலும் (ரேபரேலி அல்ல) சர்வசகஜமாக குடிசை குடிசையாகச் சென்று பெண்களின் கண்ணீர்க் கதைகளைப் பொறுமையாகக் கேட்பது, அதற்காக நிஜமாகவே கவலைப்படுவது - இவை இவரைப் பொறுப்புள்ள அழகிய குடிமகனாக காண்பிக்கின்றன.

கடந்த வருடம் போபால் போன போது அங்கு ஒரு பள்ளிக்கூடச் சிறுமி ராகுலைப் பார்த்து, "உங்களுக்கு எப்போது திருமணம்? என்ன மாதிரி மனைவியை எதிர்பார்க்கிறீர்கள்..." என சரமாரியாகக் கேட்க, பிங்க் கலரான ராகுல் வெட்கத்தில் பீட்ரூட்டாக மாறிவிட்டாராம். சமீபத்தில் வடோதராவில் ஒரு கல்லூரிக்குச் சென்ற ராகுல் காந்திக்கு மாணவமணிகளுடன் கலந்துரையாட ஆர்வம். செக்யூரிட்டி கெடுபிடியினால் முடியாமல் போனதாம். ஆனாலும் கல்லூரி கேன்டீனுக்கு ராகுல் போனதால் அதன் உரிமையாளர் கசிந்துருகி ஒவ்வொரு உணவின் பெயரிலும் ராகுலின் பெயரையும் சேர்த்து விட்டாராம். இந்தப் புது ராகுல் மெனுகார்ட் மாணவிகளுக்கு பிடித்திருப்பது ஹைலைட்!

# 'யூத்' ஐகான்

**மகேந்திரசிங் தோனி:** ஸ்கிப்பர் தோனியின் பெயரைக் கேட்டாலே பெண்களின் மனம் சந்தோஷத்தில் ஸ்கிப்பிங் ஆடுகிறது. யூத் ஐகான், ரோல் மாடல், ஸ்டைலிஸ்ட், ஃபேஷன் மாடல்... எனப் பல திருநாமங்கள்.

இவருடைய ஹேர்ஸ்டைல், டி-ஷர்ட்ஸ், வாட்ச், தானே டிசைன் செய்த விக்கெட் கீப்பிங் க்ளவுஸ்கள்... என ஒவ்வொன்றிலும் தோனியின் அக்மார்க் ஸ்டைல்!

வைரம் பதித்த வாட்ச், தோனி வாங்கிப் பெருமையாகக் கட்டிக் கொண்டது ஆஸ்திரேலியாவை ஜெயித்த தருணத்தில். இதற்காகப் பல லட்சங்

## 1,2,3...

கள் செலவழித்தாராம். விதவித மான காலணிகள், லெதர் ஜாக் கெட்டுகள், ஃபங்கி பெல்டுக் கள்... தோனியின் ஸ்டைல் ஸ்டேட்மென்ட். மோட்டார் பைக் என்றால் பைத்தியம் பிடித்து விடும் தோனி ''எனக்கு படு ஸ்பீடா வண்டி ஓட்டுவது பிடிக் கும். ஆனால் ராஷா ஓட்ட மாட் டேன்...'' என்கிறார். பிரை வேட் ஜெட் வாங்கி விட வேண்டும் என்பது சீக்ரெட் கனவாம்.

புகழின் உச்சியில் உட்கார்ந்து கொண்டு, ராஞ்சி (அவருடைய ஊர்)யிலிருக்கும் செயின்ட் சேவியர் கல்லூரியில் டிகிரி படிப் புக்குச் சேர்ந்திருக்கிறாராம் தோனி. ''தோனி காலேஜ் வந்தா நாங்க எப்படி படிப்பதாம்.'' என கல்லூரிப் பெண்கள் உற்சாக அழுகை அழுகிறார்களாம். எம்.டி.வி.யின் 'யூத் ஐகான்' பட்டம் தோனியின் பாக்கெட்டில்!

**ஏ.ஆர். ரஹ்மான்:** இவர் பேசுவதை விட இவருடைய இசை பேசுகிறது உல கெங்கும்! எளிமை, அடக்கம், உயரிய பண்பு, இறைநம்பிக்கை... இதுதான் ரஹ் மானின் ஸ்டைல் மந்த்ரா! இரட்டை ஆஸ்கர் வாங்கினாலும் ஃபேஷன் ட்ரெண்ட் என்ன, என்ன மாதிரி ட்ரெஸ் போடணும் என்பதில் மனைவி சாய்ரா சொல்வதைப் பின்பற்றுவதில் ரஹ்மா னுக்கு சந்தோஷம். விருது விழா, மியூஸிக் ஷோ, கலை நிகழ்ச்சிகள் எல்லாவற்றிலுமே மனைவி சாய்ரா டிசைன் செய்யும் உடை களையே அணிகிறாராம். ''அவர் மிகவும் சிம்பிள். ஃப்ளாஷியாக ட்ரஸ் பண்ண மாட்டார். ஆஸ்கரில் ட்ரஸ் கோட் என்பது மிகவும் முக்கியம். ரெட் கார் பெட் வெல்கம் போது ரஹ் மான் கறுப்பு அர்மானி டக்ஸேடோ ஸூட் அணிந்திருந்தார். அவருடைய பாடல் நிகழ்ச்சியின் போது கொல்கத்தா டிசை னரான சப்யஸாச்சி டிசைன் செய்த காதி ஷெர்வானி போட்டார். மனைவி சாய்ராவும் எம்ப்ராய் டரி செய்த ரிச் கறுப்பு சல்வார் கமீஸ் போட் டார். இருவருமே படு சிம்பிளான பேர் வழிகள். இருவருக்குமே கறுப்புதான் ஃபேவரிட் கலர்...'' டிடெயில் கொடுக் கிறார் ஃபேஷன் டிசைனர் விஜேத்தா குமார்.

**- லதா சேகர்**

கருப்புதான் எனது ஃபேவரிட் கலர்





**இன்றைய சூழ்நிலையில் டென்ஷனின் உச்சத்தில் இருப்பவர் உயர்நீதிமன்ற வழக்கறிஞர்கள் சங்கத் தலைவர் பால். கனகராஜ். ஒரு பக்கம் உணர்ச்சிக் கொந்தளிப்பான வழக்கறிஞர்கள். மறுபுறம் பொது மக்களிடம் சரிந்து வரும் அவர்கள் இமேஜ். இந்த நிலையில், விசாரணை கமிஷன், சுப்ரீம் கோர்ட் என்று பரபரப்பாக அலைந்து கொண்டிருந்தவரிடம் சூடான கேள்விகளை வைத்தோம். கோபப்படாமல் பதில் சொன்னார் பால். கனகராஜ்.**

**இந்த வருடம் இதுவரை உயர்நீதிமன்றம் ஒன்பது நாட்கள் மட்டுமே நடந்துள்ளது. இது எந்த வகையிலும் வழக்காடும் பொது மக்களுக்கு நியாயம் கற்பித்ததாக ஆகாது என்பதை உணர்கிறீர்களா?**

இலங்கையில் தமிழர்கள் மீது தாக்குதல் நடக்கும்போதெல்லாம், வழக்கறிஞர்களிடையே போராட்ட உணர்வுகள் மேலோங்கும். உயர்நீதிமன்றத்துக்கு வெளியே வழக்கறிஞர்கள் அரசியல் தலைவர்களைக் கூப்பிட்டுப் போராட்டம் நடத்திய பின்னரே, தமிழகமெங்கும் எதிர்ப்புணர்ச்சி கிளம்பியது. இப்படிப் போராட்டங்கள் நடந்து கொண்டிருக்கையில்தான் விரும்பத்தகாத சம்பவங்கள் நடைபெற்று விட்டன. பொதுமக்களைச் சிரமப்படுத்த வேண்டும் என்பது எங்கள் நோக்கமல்ல.

**ஆனால் அதற்கு முன்னரே சுப்பிரமணிய சுவாமி மீது முட்டை வீசி, விஷயங்கள் கொதி நிலைக்கு வந்து விட்டனவே! நீதிமன்றத்துக்குள் முட்டை வீசியது சரியா?**

எங்கள் சங்கத்தில் 13,000 வழக்கறிஞர்கள் இருக்கிறார்கள். சு.சுவாமி விஷயத்தில் நீதிமன்றத்தின் உள்ளே வழக்கறிஞர்கள் அவர் மீது முட்டை வீசியிருந்தால் அது தவறுதான். அந்தக் குற்றத்தைச் செய்தவர்கள் சட்டத்தின் முன்பு நிறுத்தப்பட வேண்டும் என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லை. அதே சமயம் சுவாமி, சிதம்பரம் நடராஜர் கோயில் வழக்கில் தீட்சிதர்களுக்கு ஆதரவாக ஆஜர் ஆவது பிடிக்காத பொதுமக்கள் சிலர், அவர் மீது முட்டை வீசியதாக ஒரு

தகவல் இருக்கிறது. நீதிமன்ற அறையை வழக்கறிஞர்கள் சேதப்படுத்தியிருந்தாலும் தவறு. காவல் துறை சேதப்படுத்தியிருந்தாலும் தவறுதான்.

**உங்கள் கட்டுப்பாட்டில் வழக்கறிஞர்கள் இருப்பதாகவே தெரியவில்லையே?**

உங்கள் வீட்டில் எல்லா பிள்ளைகளும் ஒரே போன்று இருக்கிறார்களா? இலங்கையில் அன்றாடம் ஏற்படும் நிகழ்வுகளின் வீரியத்துக்கு ஏற்ப, எங்கள் போராட்டத்தில் எதிரொலி இருக்கிறது. உணர்வுபூர்வமாகவும், விளம்பர ஆசை காரணமாகவும், வும் காவல்துறை நடவடிக்கை எடுக்கட்டும். இந்த வழக்குகளை வழக்கறிஞர்கள் நேரடியாகச் சந்தித்துக் கொள்ள வேண்டும். சங்கம் எதுவும் செய்யாது. பல வழக்குகளில் வழக்கறிஞர்களை நேரடியாகக் கைது செய்து வழக்கு போடுகிறது போலீஸ். எங்களின் இமேஜை சேதப்படுத்த வேண்டுமென்பதற்காகவே, வழக்கறிஞர்கள் போல கறுப்பு பேண்ட், வெள்ளைச் சட்டை அணிந்த ரவுடிகள் போலீஸ் உதவியுடன் ஊடுருவினார்கள் என்ற தகவலையும் தீர விசாரிக்க வேண்டும். இந்த அடிப்படையில் காவல் நிலைய எரிப்பும் தீர விசாரிக்கப்படவேண்டியதே.

✱ பால். கனகராஜ்






# "போலீஸை எதிர்க்கும் வல்லமை எங்களுக்குண்டு!"

## –வழக்கறிஞர்களின் தலைவர் பேட்டி

சில வழக்கறிஞர்கள் எல்லை மீறுகிறார்கள் என்பதை நான் மறுக்கவில்லை. ஆனால் தலைவர்களின் படங்களை எரித்தவர்கள் மீதும், சுவாமி மீது முட்டை வீசிய விவகாரத்திலும் வழக்கறிஞர்கள் மேல் காவல் துறை நேரடி நடவடிக்கை எடுக்கலாம். இதே போல் உயர்நீதி மன்றத்துக்கு வெளியே நடந்த வன்முறைகள் தொடர்பாக

**இந்தச் சம்பவங்களின் காரணமாக பெரிய கரும்புள்ளி விழுந்து விட்டது என்பதை ஒப்புக்கொள்கிறீர்களா?**

மறுப்பதற்கில்லை. சமுதாயத்தின் மற்ற பிரிவுகளில் ஏற்பட்டிருக்கும் சீரழிவு இங்கேயும் பிரதிபலிப்பதைத் தடுக்க முடியாது. அது இயற்கையின் நியதி. ஒரு வழக்கறிஞன் கண்ணியமாக உருவாவது என்பது அவன்



என்பதையும் நினைத்துப் பாருங்கள்.

**At the end of the day அதாவது நிகழ்வுகளின் முடிவில் பார்க்கும்போது, வழக்கறிஞர்களுக்குப் பொது மக்களிடம் ஆதரவு இல்லையே!**

இதற்குக் காரணம் காவல் துறை எங்களைப் பற்றி உண்டாக்கி வைத்திருக்கும் கெட்ட இமேஜ்தான். பொது மக்கள் பாதிக்கப்பட்டால், மனித உரிமை பாதிக்கப்பட்டால், காவல் துறை அட்டூழியங்கள் செய்தால் அதை நேருக்கு நேர் தட்டிக் கேட்டு, சட்டத்தின் முன் அவர்களை நிறுத்துவது வழக்கறிஞர் சமூகமே. சமுதாயத்தில் காவல் துறையை எதிர்க்கும் வல்லமை எங்களுக்கு மட்டுமே உண்டு. எனவே, வாய்ப்பு கிடைக்கும்போதெல்லாம், பிரச்னையைப் பெரிதாக்கி, வழக்கறிஞர்கள் மேல் கேஸ்களைப் போடுவது காவல் துறைக்கு வாடிக்கையாகி விட்டது. எங்கள் மீது தாக்குதலை நியாயப்படுத்த வேண்டாம். ஏனென்றால் நாளை வேறு பல பிரிவினர் மீதும் அது தொடரும்.

## சமுதாயத்தில் ஏற்பட்டிருக்கும் சீரழிவு இங்கேயும் பிரதிபலிப்பதைத் தடுக்க முடியவில்லை!

படித்த கல்லூரி, அவன் பணிபுரிந்த சீனியர் மற்றும் குடும்பச்சூழல், நண்பர்கள் வட்டாரம் இவற்றைப் பொறுத்தே அமைகிறது. கட்டப் பஞ்சாயத்து, பிளாக்மெயில் வழக்கறிஞர்களிடம் தொழிற்பயிற்சி எடுத்துக் கொண்டால், எப்படி பண்புள்ளவனாக கண்ணியமாக நடந்து கொள்வான்?

**கட்சி அரசியலும், ஜாதிப் பிடிப்பும் வழக்கறிஞர்களிடையே வேரூன்றி இருக்கிறது என்பது உண்மைதானா?**

மக்களிடையே இந்த உணர்வுகள் எப்படி இருக்கின்றனவோ அதே போன்று உயர்நீதிமன்றத்திலும் பிரதிபலிக்கின்றன. இந்த மோதலுக்குப் பிறகு தமிழக அரசின் போக்கில் ஏற்பட்ட அதிருப்தியில் நான் தி.மு.க.விலிருந்து விலகிவிட்டேன். சோனியா படம் துரதிர்ஷ்டவசமாக எரிக்கப்பட்டது.

**அநாகரிகத்தின் உச்சகட்டமாக, போலீஸ் அதிகாரிகளின் உருவப் பொம்மைகளுக்குப் பாடை கட்டி எரித்து திதி செய்வது அக்கிரமம் இல்லையா?**

நிச்சயமாக அநாகரிகம்தான். ஆனால் எந்த அளவுக்கு அப்பாவி வழக்கறிஞர்கள் தாக்கப்பட்டிருந்தால், இதுபோன்ற செயல்களில் அவர்கள் ஈடுபடுவார்கள்

**சரி... எப்போதுதான் நீதிமன்றம் செல்வீர்கள்?**

அடிபட்ட வழக்கறிஞர்கள் எங்களுக்கு நியாயம் கிடைக்க வேண்டும் என்று சொல்கிறார்கள். வழக்காடும் பொதுமக்களுக்குப் பாதிப்பு என்று சொல்வதும் சரிதான். அதே சமயம் இந்தப் புறக்கணிப்பில் எங்களுக்கும் வருமானம் போய்விடுகிறது என்பதும் உண்மைதானே! இதுகுறித்து எங்கள் பொதுக்குழு முடிவு செய்யும்.

**- ப்ரியன்**





# கற்றல்... கற்பித்தல்!

**த**ன் மூன்றாவது வயதில் எதிர்பாராதவிதமாக, கண் பார்வையிழந்த ஒரு சிறுவன் என்னென்ன சாதனைகள் செய்ய முடியும்? ப்ரெய்ல் தம் 20வது வயதில் பார்வை யற்றோருக்கான முதல் புத்த கத்தை வெளியிட்டார்.

ப்ரெய்ல் எழுத்து முறை யைக் கண்டறிந்த லூயிஸ் ப்ரெய்லின் 200-வது ஆண்டு இது. இராணு வத்தில் தகவல் பரிமாற உதவும் சங்கேதக் குறியீடுகளை அடிப்படையாகக் கொண்டு, தம் 15-வது வயதில் ப்ரெய்ல் முறையை வடிவமைத்தார். கணிதம் மற்றும் சங்கீதக் குறியீடுகளையும் உள்ளடக்கியது இந்த ப்ரெய்ல் எழுத்து முறை.

தாம் பயின்ற கல்வி நிறுவனத்தி லேயே ஆசிரியராகப் பணியாற்றிய ப்ரெய்ல், 43-ம் வயதில் மறைந்தார். அவர் வாழ்நாளின் இறுதிவரை, ப்ரெய்ல் கல்வி முறை நடைமுறைப்படுத்தப் படவில்லை. 1852-ல் அவர் இறந்தபின், 1854-ல் ஃபிரான்ஸ் அரசு ப்ரெய்ல் முறையை அங்கீகரித்தது.

ப்ரெய்லின் 200-ஆம் ஆண்டை, கனடா சிறப்பாகக் கொண்டாடுகிறது. கனடாவின் ப்ரெய்ல் கல்வி நிறுவனமும் (CBLF) பார்வை யற்றோருக்கான தேசியக் கல்வி நிலையமும் (CNIB) பல்வேறு நிகழ்ச்சிகளை நடத்துகின் றன.

"இந்த விஞ்ஞான யுகத்துக்குப் பொருந் தும் வகையில் முன்னெப்போதும் விட ப்ரெய்ல் முறை மேம்படுத்தப்பட்டுள்ளது. கற்றல், கற்பித்தல், அணுகுதலில் ப்ரெய்ல் முறையை முன்னெடுத்துச் செல்வதில் CNIB முக்கியப் பங்கு வகிக்கும். பார்வையற் றோர்க்கான உயர் கல்விக்கும், அவர்களது சாதனைகளுக்கும் பிரகாசமான வாய்ப்பு உள்ளது'' என்கிறார் CNIBயின் தலைமைச் செயல் அலுவலர் ஜிம் சாண்டர்ஸ்.

**டெய்ல் பீஸ்:**

தேறியவர்களுக்கு அரசுப் பணி வழங் கப்படும் என்ற அடிப்படையில் தமிழக அரசு நடத்தும் பார்வையற்றோர்க்கான பயிற்சி வகுப்பில், கடந்த ஆண்டு 35 இளை ஞர்கள் தேர்ச்சி பெற்றனர். இவர்களில் 13 பேர் கடந்த நவம்பரில் பணி நியமனம் செய்யப்பட்டனர். ஜனவரி 2009ல் வாய்ப்பு வழங்கப்படும் என்று உறுதியளிக்கப்பட்ட இதுவரை பணி நியமன உத்தரவு பெறப் படாதோர் போராட்டத்தில் ஈடுபட்டனர். பின்னர் இவர்கள் ஒருநாள் காவலில் வைக் கப்பட்டு விடுவிக்கப்பட்டனர். கண்டு கொள்ளப்படாத ப்ரெய்ல்கள் பலர் இன் னும் எங்கெல்லாம் இருக்கின்றனரோ?

**- காஞ்சன்**





## www.idlyvadai.blogspot.com

எழுதுபவர் யாரென்று தெரியாது. ஆனால் இதில் எழுதப்படும் விஷயங்கள் சுடச்சுடவும், காரசாரமாகவும் எள்ள லாகவும் இருக்கும். இட்லி வடையின் சுயவிவரக் குறிப்பே சுவாரஸ்யமானது.

பெயர் : இட்லி வடை

பெயர்க்காரணம் : தமிழர்களை நம்பி வைத்த பெயர்.

நிஜக்காரணம் : ஹி... ஹி... வேறு என்ன பயம்தான்

பிறந்தது, வளர்ந்தது: பிறந்தவுடன் வெந்தேன் வளர்ந்தேன்.

சாதனை: திருமணம் ஆகவில்லை

காரணம்: பிரைடு இட்லி, வடைகறி ஆக விருப்பமில்லை

வேதனை: படிப்பவர்களுக்குத் தெரியும்

நிரந்தரப் பொழுதுபோக்கு: அச்சு பிச்சு பதிவுகள்

தற்போதைய பொழுதுபோக்கு: அரசியல் பதிவுகள்

நிரந்தர நண்பர்கள்: சட்னி, சாம்பார்

நிரந்தரக் கூட்டணி: ஓட்டை வடை

பிடித்த புத்தகம்: சமைத்துப் பார் (அல்லையன்ஸ் பதிப்பகம்)

அடிக்கடி செல்லும் ஸ்தலம்/தளம்: முருகன் இட்லிக்கடை

முணுமுணுக்கும் பாடல்: எல்லோ ரும் மாவாட்டக் கத்துக்கிடணும்.

கிடைக்குமிடம்:

www:idlyvadai.blogspot.com/

ஆர்டர்களுக்கும் (ஆட்டோ அனுப்பு வதற்கும்) idlyvadai2007@gmail.com

---

கூட்ஸ் வண்டி என்று தன் வலைப் பூவுக்குப் பெயர் வைத்திருக்கிறார் எழுத் தாளர் அஜயன் பாலா.

மருதுவைப் பற்றிய அவரது பதிவு:

சென்னை நகருக்குள் முதன்முதலாக நான் அடியெடுத்து வைத்த ஆரம்ப சில, பல நாட்களின் போது வீதிகளில் நான் நடந்து சென்றதாகவே உணர வில்லை. கிட்டத்தட்ட பறந்து கொண்டி ருந்தேன். எழுத்தாளர்களை நேரடியாகச் சந்தித்து அவர்களோடு பேசக் கிடைத்த வாய்ப்புகள் எனது மாலை நேரங்களை மேலும் வசீகரமாக்கிக் கொண்டிருந்தன. தி.நகர் ரங்கநாதன் தெருவிலிருந்த ஒரு வணிக வளாகத்தின் மூன்றாவது மாடியில் அப்போது இருந்த முன்றில் சிற்றிதழின் அலுவலகத்தில்தான் மருதுவை முதன் முதலாகச் சந்தித்தேன். அதன் பிறகு நான் பணி செய்து கொண்டிருந்த அரசி யல் புலனாய்வுப் பத்திரிகையின் தொடர் நிமித்தமாக ஓவியங்களை வாங்கச் சென்றபோது ஓரளவு பரிச்சயம் ஏற்பட்டது. அதுவரை நேரடித் தன்மைகொண்ட




## www.ajayanbala.blogspot.com

# www.selventhiran.blogspot.com



சுயஎள்ளல் மிகுந்திருக்கும் செல்வேந்திரனின் வலைப்பூவில் ஜாலியாக வாசிக்கவும், சில சமயம் சீரியஸாக வாசிக்கவும் விஷயங்கள் உள்ளன. அவரின் பதிவு ஒன்று:

தமிழக அரசின் கலைமாமணி விருதுப் பட்டியலில் என் இனிய அண்ணன் பாஸ்கர் சக்தியின் பெயரும் இடம்பெற்றுள்ளது பெரும் மகிழ்ச்சியை அளிக்கிறது. எம்மகன், முனியாண்டி விலங்கியல் மூன்றாம் ஆண்டு மற்றும் சமீபத்தில் வெளியான வெண்ணிலா கபடி குழு ஆகிய படங்களின் வசனகர்த்தா அவர். 'நீ வர்ற வரைக்கும் வச்சிகிட்டா இருப்பாய்ங்க...' போன்ற எளிய, இயல்பான வசனங்களின் மூலம் 'வெண்ணிலா கபடி குழு' திரைப்படத்தில் தன் இருப்பைப் பரவலாக்கியவர்.

அழகர்சாமியின் குதிரை, பழுப்பு நிறப் புகைப்படம் ஆகிய இரு சிறுகதைத் தொகுப்புகள் வெளிவந்திருக்கின்றன.

பாஸ்கர் சக்தி மேலும் பல தளங்களில் இயங்கி நம்மை மகிழ்விக்க இந்த விருது ஒரு உந்துசக்தியாக இருக்கும் என்று நம்புகிறேன். மனதார வாழ்த்துகிறேன்.



# இட்லி டேட்டா

## 'வலை'யோடு விளையாடு

பெண்களை மட்டுமே பிரதானமாகக் கொண்ட சித்திரங்களாகப் பார்த்துப் பழகிய தமிழ் வெகுஜன வாசகப் பரப்புக்கு, தனது சிதிலமான சித்திரங் களின் மூலம் புதியதொரு திசையை மருது உருவாக்கிக்கொண்டிருந்த கால கட்டம் அது. ஆதிமூலத்தை முன்னோடி யாகக் கொண்டு பல ஓவியர்கள் அன்று தீவிரப் பத்திரிகைகளில் இத்தகைய பாணியை முன்பே உருவாக்கிக் கொண்டி ருந்தாலும், புத்தகங்களின் மேலட்டை களிலும், வணிக இதழ்களிலுமாக மருது வெகுஜன தளத்தில் நன்கு ஊடுருவிக் கொண்டிருந்தார். அதன் பிறகு கூட்டங் களிலும் பொது நிகழ்ச்சி களிலும் அவரை அடிக்கடி சந்தித்தபோது சுயபிரக்ஞை இல்லாமல் பழகும் அவரது சுபாவம் என்னை ஈர்த்தது.

**- சரா ஆதித்யா**

# திருமணம் மற்ற விசேஷங்களுக்கு மசாலாப் பொருட்களை நாங்களே எந்த கெமிக்கலும் இல்லாமல் தயாரிக்கிறோம்!



* சுபம் கணேசன்

''கணேசா! இந்த அலைச்சல் பிடிச்ச வேலை என்னோடும், உன் அண்ணன்களோடும் போகட்டும். நம்ம குடும்பத்துல யாராவது ஒருத்தர் ஆபீஸ் வேலைக்குப் போகணும். அதுதான் என்னோட ஆசை.''

காஞ்சிபுரத்தில் அப்பளம், வடாம் போன்றவற்றைத் தயாரித்து விற்று, சொற்ப வருமானத்தில் காலத்தை ஓட்டிக் கொண்டிருந்த குடும்பத்தின் தலைவர் சுப்பிரமணியம், நான்காவது மற்றும் கடைசி பிள்ளையான கணேசனிடம் தமது எண்ணத்தைச் சொன்னார்.

''அப்பாவோட ஆசைக்காக படிப்பு முடிச்சதும் கம்ப்யூட்டர் புரோகிராமரா வேலையில சேர்ந்தேன். ஆனால், அந்த ஒயிட் காலர் ஜாப்ல என்னால இருக்க முடியலை. நாலு பேருக்கு வேலை கொடுக்கற கலையைக் கையில வெச்சுக்கிட்டு இப்படி உட்கார்ந்து இருக்கோமேன்னு உறுத்தலா இருந்தது. ஐந்தே வருஷம்தான். வேலையை ரிஸைன் பண்ணிட்டு அப்பா முன்னாடி போய் நின்னேன். நம்ம குடும்பத் தொழிலையே இன்னும் பெருசா செய்து காட்டறேன்ப்பான்னு சொன்னேன்'' என்கிறார் மேரேஜ் கேட்டரிங் சர்வீஸ், சுபம் அப்பளம் அண்ட் ஸ்நாக்ஸ் தயாரிப்பின் உரிமையாளர் சுபம் கணேசன்.

இன்று மயிலாப்பூர் மற்றும் மந்தைவெளியில் வீற்றிருக்கின்றன 'சுபம் ஸ்வீட்ஸ் அண்ட் ஸ்நாக்ஸ்'. ஆரம்பத்தில் சிறிய கடையாகத் தொடங்கப்பட்டது. சுவையால் கவரப்பட்ட வாடிக்கையாளர்கள், தங்களது வீட்டின் சின்னச் சின்ன விசேஷங்களுக்கு இவரை அணுகினர்.

''வந்த வாய்ப்புகளை நன்கு பயன்படுத்திக் கொண்டேன். லாபத்தை மட்டும் குறிக்கோளாகக் கருதாமல் ஆரோக்கியம், சுவை, குறைந்த செலவு இவற்றை மனத்தில் கொண்டு செய்து கொடுத்தேன். இன்று அறுபது பேர் என்னிடம் பணிபுரிகிறார்கள். திருமணம், மற்ற விசேஷங்களுக்கு சரியான சுவையில், நியாயமான விலையில், வயிற்றுக்குக் கெடுதல் செய்யாத வகையில், அதிகமான எண்ணெய் மற்றும் மசாலாப் பொருட்கள் இல்லாத தரமான உணவு வகைகளை நல்ல சர்வீஸோடு செய்து வருகிறோம். உணவுகளுக்குத் தேவையான மசாலாப் பொருட்களை வெளியே வாங்குவதில்லை. வீட்டில் தயாரிப்பதைப் போல் முழுக்க முழுக்க நாங்களே தயாரிக்கிறோம்.

இதனால் மசாலாப் பொருட்களில் தேவை யற்ற கெமிக்கல்கள் சேருவதில்லை'' என்கிறார் சுபம் கணேசன்.

இதற்காகவே காஞ்சிபுரத்தில் ஒரு ஏக்கர் பரப்பளவில் ஒரு தொழிற்சாலையை நிறுவியிருப்பதுதான் சுபம் கணேசனுடைய தொழில் ஹைலைட். இங்கு சீர்வரிசை பட்சணங்கள், மசாலாப் பொருட்கள், அப்பளம், வடாம் போன்றவை தயாரிக்கப் படுகின்றன. தமது கடைகள், தாம் கான்ட் ராக்ட் எடுக்கும் திருமணங்களுக்கு இருக்கும்'' என்று பெருமையுடன் குறிப் பிடுகிறார்.

தமது அடுத்த இலக்காக சென்னையில் ஒரு த்ரீ ஸ்டார் ஹோட்டல் கட்ட வேண் டும். அதில் தற்காலத்தில் எல்லோரும் மறந்து விட்டிருக்கும் நமது பாரம்பரிய உணவுகளை, சுவையோடு தரத்துடன் அளிக்க வேண்டும் என்கிறார்.

தமது வெற்றியின் ரகசியமாக இவர் கூறுவது?

''சொந்தத் தொழில் செய்ய நினைப்

# சுவை கூட்டும் சுபமுகூர்த்தம்!





■ காஞ்சிபுரம் தொழிற்கூடத்தில்...

இவற்றை உபயோகிப்பதுடன் மொத்த விற்பனைக்கும் அளிக்கிறார்.

''ஒரே சமயத்தில் ஐந்து திருமணங்களின் பொறுப்பை ஏற்றுக்கொண்டு சமாளிப் போம். ஐந்து இடங்களிலும் வெவ்வேறு மாஸ்டர்கள். ஆனால், உணவின் சுவையில் கொஞ்சம் கூட மாற்றமிருக்காது. எப்படி ஒரே மாதிரியிருக்கு? என வியக்காதவர்களே இல்லை. அந்த அளவுக்கு எங்கள் பயிற்சி

பவர்களுக்கு, பணமும், கடுமையான உழைப்பும், முன்னேற வேண்டும் என்கிற முனைப்பும்தான் தேவை. தமது தொழிலில் ஏற்படும் புதிய மாற்றங்களை அறியும் ஆர்வம் அதைவிட அவசியம்.''

அவரது கைமணம் போலவே பேச்சும் சுவையாக இருக்கிறது.

சந்திப்பு: **யுவராஜ்**



# கல்கி




2009 மார்ச் 15
சர்வதாரி பங்குனி 2
மலர் : 67
இதழ் : 33


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## பாக். பயங்கரம் உணர்த்தும் பாடம்

இலங்கை கிரிக்கெட் வீரர்கள் பாகிஸ்தானில் தாக்கப்பட்ட சம்பவம் பேரதிர்ச்சி அளிக்கிறது. ஆனால், அதைக் காட்டிலும் அதிர்ச்சி தருவது, "அந்தத் தாக்குதலில் இந்தியாவுக்குப் பங்கு இருக்கக்கூடும்" என்று பாக். அரசியல் தலைவர்கள் பலரும் அதிகாரிகள் சிலரும் பேசியிருப்பதுதான். பயங்கரவாதத்தைக் காட்டிலும் கொடுமையானது இந்த அபாண்டம். மும்பை 26/11 தாக்குதல்கள் பாகிஸ்தானில் திட்டமிடப்பட்டன என்ற குற்றச்சாட்டுக்கு பதிலடி கொடுப்பதாக நினைத்துக்கொண்டு பொறுப்பின்றிப் பேசியுள்ளனர்.

உண்மையில், 26/11/ தாக்குதல் பாகிஸ்தானில் திட்டமிடப்பட்டதற்கான ஆதாரங்களை இந்தியா சமர்ப்பிக்க, பாகிஸ்தானே அதை ஏற்று, அதன் அடிப்படையில் சிலரைக் கைதும் செய்துள்ளது. இதனால் கோபமடைந்த பயங்கரவாதிகள், பாக். அரசுக்கு அவப்பெயரை உண்டாக்க இலங்கை கிரிக்கெட் வீரர்களைத் தாக்க முடிவெடுத்திருக்கக்கூடும். இலங்கை வீரர்கள் உயிர் தப்பியது அவர்களுடைய அதிர்ஷ்டம் மட்டுமல்ல, பாகிஸ்தானின் அதிர்ஷ்டமும் கூட; இல்லாவிட்டால் அந்நாடும் அரசும் சந்தித்திருக்கக்கூடிய உலகளாவிய கண்டனங்களும் விமர்சனங்களும் மிகக் கடுமையாக இருந்திருக்கும். கண்டனத்தின் வீரியத்தைக் குறைக்க ஆறு பாகிஸ்தானிய போலீஸார் உயிரைக் கொடுத்து உதவியிருக்கிறார்கள்.

பலவீனமான பாக். அரசு பயங்கரவாதத்தை ஒடுக்கும் ஆற்றலும் திறனும் படைத்திருக்கிறதென்று கூற முடியாது. ஏன், இந்தியாவும்

ராக்கெட் விட்டுப் பார்க்கறேன்
மத்திய அரசு
உச்ச நீதிமன்றம்
சாவ்லா பதவி நீக்க சிபாரிசு
குடியரசுத் தலைவர்




கூட பயங்கரவாதத்தை ஒடுக்கவும் ஒழிக்கவும் இயலாமல் திணறிக் கொண்டுதான் இருக்கிறது. பாதுகாப்புச் செலவுதான் ஏறுகிறதேயொழிய போதுமான அளவு பாதுகாப்பு கிடைப்பதேயில்லை. இதற்கெல்லாம் முக்கியமான காரணம் பயங்கரவாதம் என்பதே ஈவிரக்கமற்ற சதி என்பதுதான்!

இத்தனை காலமாக இந்தச் சதிகாரர்களை ஊக்குவித்ததும் இந்தியாவுக்கு எதிரான அரசியல் ஆதாயத்துக்குப் பயன்படுத்திக் கொண்டதும் பாகிஸ்தான் செய்த மிகப் பெரிய தவறு. இப்போது, வளர்த்த கடா மார்பில் பாயும் கதையாக, பயங்கரவாத அமைப்புகள் பாகிஸ்தான் அரசுக்கே அபாயமாக மாறிவிட்டன. இது தெற்கு ஆசியாவின் பாதுகாப்பையே அச்சுறுத்தும் அறிகுறி.

இனி இந்தியாவும் பாகிஸ்தானும் பரஸ்பரம் குற்றம்சாட்டிக் கொண்டிருப்பதில் அர்த்தமில்லை. இரு தேசங்களும் முன்னேற வேண்டுமானால் முதலில் பொது எதிரியான பயங்கரவாதம் கட்டுக்குள் வரவேண்டும். நாளடைவில் அரசியல் தீர்வும் பிறந்தாக வேண்டும்.

மத அடிப்படைவாதம் என்பது இந்த பயங்கரவாதத்தின் அஸ்திவாரமாக இருப்பதால், விவகாரம் மேலும் சிக்கலாகிறது. இது விஷயத்தில், அறிவிக்கப்பட்ட முஸ்லிம் நாடான பாகிஸ்தான் செய்யக்கூடியது மிக அதிகம். பயங்கரவாதத்துக்கு ஆதரவும் அங்கீகாரமும் தரக்கூடிய மதக்கூறுகளை மறுபரிசீலனை பண்ணவும் காலத்துக்கேற்ப திருத்தவும்; திருத்திய பண்பட்ட கூறுகளைப் பரப்பவும் அந்நாடு முன்னின்று செயல்பட முடியும். அதற்கு உலகளாவிய ஆதரவும் திரட்ட முடியும். ஆனால், அதையே இந்தியா செய்ய முற்பட்டால், அது மத விரோதப் போக்காகக் கொள்ளப்படும்.

எனவே, பாகிஸ்தானைக் குற்றம்சாட்டாமல், இந்தச் சீர்திருத்தம் நோக்கித் திசைதிருப்புவதே இன்று இந்திய அயலுறவுக் கொள்கையின் முக்கிய நோக்காக இருக்க வேண்டும். அதே சமயத்தில், பயங்கரவாதத்துக்கு எதிராக இருநாடுகளும் ஒத்துழைத்து, உளவுத்துறையும் பாதுகாப்பும் பலப்படுத்தப்பட்டு மிக மிக எச்சரிக்கையாக இயங்க வேண்டும். ○

# 'இடை'யில் பிறந்த நகைச்சுவை!



● எம்.மிக்கேல்ராஜ்,
விருதுநகர்.

**நகைச்சுவை உங்கள் கூடவே பிறந்ததா? இல்லை இடையில் பிறந்ததா?**

நான் பிறக்கும்போது, பிரவசம் பார்த்த லேடி டாக்டர் என் 'இடையில்' கை வைக்க அந்தக் கூச்சம் தந்த கிச்சுக்கிச்சுப்பால், அழ வேண்டிய நான் சிரித்துக்கொண்டே பிறந்தேனாம். ஆக, நகைச்சுவை எனக்கு இடையில் கூடவே பிறந்தது.

● எம்.அசோக்ராஜா, திருச்சி

**புத்தர் மீண்டும் பிறந்தால் எந்த மரத்தின் கீழ் ஞானம் பெறுவார்...?**

புத்தர் அமர பட்ட மரமும் துளிர்த்து போதி மரமாகும். பனை மரக் கள்ளும் ஞானப் பாலாகும். அது சரி, புத்தர் பிறப்பதற்குள் எல்லா மரத்தையும் வெட்டி விடுவார்கள் போலிருக்கிறதே.

● குலசை நஜ்முத்தீன்,
காயல்பட்டினம்

**வள்ளுவர் சொல்லியபடி புகழுடன் பிறப்பவர்கள் யார்...?**

அன்னையின் தொப்புள் கொடி ஏந்திப் பிறக்கும் நாம் எல்லோருமே புகழுக்காகப் பிறந்தவர்கள்தாம். மூவர்ணக் கொடியின் சுதந்திரத்துக்காகப் பாடுபட்ட மகாத்மா காந்தி, ஸ்வஸ்திக் கொடி ஏந்தி அனைவரையும் அடிமைப்படுத்திய சர்வாதிகாரி ஹிட்லர், இருவருமே சரித்திரத்தில் இடம் பெற்றவர்கள்தாம். இதில் காந்தி புகழோடு தோன்றி சரித்திரம் படைத்தவர். ஆனால் ஹிட்லர் இகழைத் தோற்றுவித்து சரித்திரத்தையே துடைத்தவர்.

வள்ளுவன் சொன்னது: ''தோன்றின் மகாத்மாவாய்த் தோன்றுக; ஹிட்லராய்த் தோன்றலின் தோன்றாமை நன்று...''

● சகாயம், விழுப்புரம்.

**காதல், காமம் விளக்கம் தருக...?**

நம் வீட்டுச் சேற்றில் முளைத்த சிறு புல்லைச் செந்தாமரையாகக் கொள்வது காதல்... மாற்றான் தோட்டத்து மண்ணாங் கட்டியை மல்லிகையாய் எண்ணி முகர்வது காமம்.

● ஆர்.பாலாஜி, சென்னை.

**எனக்கு ஒரு குழப்பம்... அழகான ஏழைப் பெண்ணை மணப்பதா? அல்லது அழகற்ற பணக்காரப் பெண்ணை மணப்பதா...?**

உங்களுக்கு கூழுக்கும் ஆசை. மீசைக்கும் ஆசை. பசியோடு மழித்த பிரம்மசாரியாக இருங்கள். உங்கள் குழப்பத்துக்கு இரண்டு தீர்வுகள். அழகான ஏழைப் பெண்ணை மணந்து, நீங்கள் உழைத்து சம்பாதித்து அவளை அழகான பணக்காரப் பெண்ணாக ஆக்குங்கள். இல்லையேல், அழகற்ற பணக்காரப் பெண்ணை மணந்து, அவளுடைய அத்தனை பணத்தையும் செலவழித்து அவளுக்கு பிளாஸ்டிக் சர்ஜரி செய்து அவளை அழகான ஏழைப் பெண்ணாக ஆக்குங்கள்.

● லலிதா, சென்னை

**''காற்றுள்ள போதே தூற்றிக் கொள்'' அப்படீன்னா இன்னா கிரேஸி...?**

எவ்வளவுதான் கெட்டவனா இருந்தாலும் 'இறந்தவனை இகழக் கூடாது'. அதனால் அவனுக்கு மூச்சுக் காற்றுள்ள போதே ஆசை தீரத் தூற்றிக் கொள்.

● என்.சண்முகம், திருவண்ணாமலை

**கெட்டிக்காரன் புளுகு எட்டு நாள்... முட்டாளின் புளுகு...?**

புளுகறதுக்குக் கெட்டிக்காரனா இருக்கணும்... முட்டாள் வாய் தவறி உண்மையைப் புளுகிடுவான்.

● பா.அசோக், திருவில்லிப்புத்தூர்

**ஒரு மனைவி தன் கணவனை 'மாமா' அல்லது 'அத்தான்' எப்படி அழைக்கலாம்?**

எனக்கென்னமோ 'ஏங்க' என்று 'ஏங்கி' அழைப்பதில், ஒரு 'இது' இருப்பதாகத் தோன்றுகிறது.




● மஞ்சுவாசுதேவன், அயிரோலி

**2009 இப்பதான் பொறந்தா மாதிரி இருக்கு. அதற்குள் இரண்டு மாதம் ஓடி விட்டதே கிரேஸி...?**

அதானே... 2008 எப்பவோ முடிஞ்சா மாதிரி இருக்கு. இரண்டு மாதம்தான் முடிஞ்சிருக்கா?

● விஸ்வேஸ்வரன், பழனி

**பெண்ணுக்குக் கற்பு... ஆணுக்கு...?**

கற்பனை. பெண்ணின் கற்பை அணையாமல் காக்கும் 'ஆண்மை தவறேல்'.



# "மதுரை எம்.பி.யாகப்

தமிழக பாராளுமன்றத் தொகுதிகளுக்கான தேர்தல் தேதி மே 13 என்று தேர்தல் ஆணையத்தால் அறிவிக்கப்பட்டிருக்கிறது. தி.மு.க. உட்பட தமிழகக் கட்சிகள் தங்களது வேட்பாளர் தேர்வில் மும்முரமாக இருக்க, 'மதுரை பாராளுமன்றத் தொகுதியின் தி.மு.க. வேட்பாளர் அண்ணன் மு.க.அழகிரி' என்று அவரது ஆதரவாளர்கள் மு.க.அழகிரியின் 58வது பிறந்த நாளுக்கே வெளிப்படையாக பேனர் வைத்தது, கட்சிக்குள்ளும் கூட்டணிக்குள்ளும் புது பரபரப்பைக் கிளப்பிவிட்டிருக்கிறது.

இந்த நேரத்தில் தி.மு.க.வின் தென் மண்டல அமைப்புச் செயலாளர் மு.க.அழகிரியைச் சந்தித்தோம்... பேட்டிக்கு முன்பாக, "தமிழரான இசையமைப்பாளர் ஏ.ஆர்.ரஹ்மானுக்கு இரண்டு ஆஸ்கர் விருதுகள் கிடைத்திருக்கின்றன. நாமெல்லாம் தமிழர் என்று பெருமைப்பட வேண்டிய நேரம் இது. ரஹ்மான், உலக அளவில் தமிழர்களுக்கு அங்கீகாரத்தைத் தேடித் தந்திருக்கிறார். வாழ்த்துகள் ரஹ்மான்" என்று தமது வாழ்த்துகளைத் தெரிவித்துவிட்டு, "இப்ப கேளுங்க உங்க கேள்விகளை" என்றார்!

***தென் மண்டல அமைப்புச் செயலாளர் என்ற முறையில் தென்தமிழகத்தில் கட்சியை வளர்க்க உங்கள் செயல் திட்டம் என்ன?***

"தி.மு.க.வில் தனிப்பட்ட ஒருவருடைய முடிவைக் கட்சிக்குள் திணிக்க முடியாது. இதுவரை பொதுக்குழுவைக் கூட்டித்தான் வரலாற்று ரீதியான நல்ல முடிவுகளை எடுத்திருக்கிறோம். அந்த வகையில் தென் தமிழக மாவட்டங்களின் செயலாளர்களை ஒன்றுகூட்டி கட்சியின் வளர்ச்சிக்குத் தேவையான ஆலோச

## - மு.க.அழகிரி பேட்டி

னைக் கூட்டத்தை நடத்தி வருகிறோம். வாய்ப்பு வரும்போது அதை தலைமைக் கழகத்துக்குத் தெரிவிப்போம். அதேநேரத்தில் தென் தமிழகத்தில் கட்சியைப் பலப்படுத்த தேவையான விஷயங்களையும் போராடிக் கேட்டுப் பெறுவோம்.''

***பாராளுமன்றத் தேர்தலைப் புறக்கணிக்க எந்தக் கட்சிக்கும் தைரியம் இல்லை என்கிறாரே விஜயகாந்த்... அப்படியா?***

''திருமங்கலம் இடைத் தேர்தலில் அவருக்கு விழுந்த மரண அடியில் ஏதேதோ பினாத்திக்கொண்டிருக்கிறார். இந்த நேரத்தில் பாராளுமன்றத் தேர்தலில் போட்டியிட்டால் தோல்வி அடைந்துவிடுவோமோ என்ற பயம் அவரை நடுங்க வைத்திருக்கிறது. அரசியல் என்பது அரிதாரம் பூசிக்கொண்டு கேமரா முன்பு நிற்பது அல்ல. சுருக்கமாகச் சொன்னால், விஜயகாந்த் காற்றுப்போன பலூன்; இனி மேலெழ முடியாது.''

***ஆனால், விஜயகாந்தோடு கூட்டணி வைத்துக்கொள்ள காங்கிரஸ் ஆசைப்படுகிறதே?***

''ஆசை இருக்கலாம். ஆனால், நியாயம் இருக்கணும் அல்லவா? தமிழக காங்கிரஸ்"க்கு நியாயங்களைப் பற்றி நாங்கள் சொல்லத் தேவையில்லை. சோனியா காந்தியின் வழிகாட்டுதலின் கீழ் இயங்குகிற அவர்கள், நியாயத்தோடு நடந்து கொள்வார்கள் என்றே கலைஞர்



நம்புகிறார்.''

***அ.தி.மு.க. அணிக்கு காங்கிரஸ் வரவேண்டும் என்கிறாரே ஜெயலலிதா?***

''அதற்கு வீரப்ப மொய்லி கொடுத்த பதில் அறிக்கையிலேயே காங்கிரஸ் கட்சியின் நிலை தெரிவிக்கப்பட்டு விட்டது. இப்போது எங்களுக்கு உள்ள கேள்வியெல்லாம், காங்கிரஸ் இருக்கும் கூட்டணியில் கம்யூனிஸ்ட்கள் இருக்கமாட்டோம் என்று பிய்த்துக் கொண்டு போனவர்கள், வாய் மூடிக்கொண்டு இருப்பது ஏன்? அவர்களின் தைரியம் எங்கே போயிற்று? கம்யூனிஸ்ட்களுக்கு மெல்லவும் முடியாத, விழுங்கவும் முடியாத நிலைதான்.''

***பா.ம.க., கம்யூனிஸ்ட்கள்... தி.மு.க. கூட்டணியில் இருந்து வெளியேறிய நிலையில் மீண்டும் நாற்பதுக்கு நாற்பது சாத்தியமா?***



## "விஜயகாந்த், காற்றுப்போன பலூன்; இனி மேலெழும்ப முடியாது"

''நிச்சயமாக நாற்பது தொகுதிகளிலும் தி.மு.க. கூட்டணி வெற்றி பெறும். இதில் எந்தச் சந்தேகமும் வேண்டாம். திருமங்கலம் இடைத்தேர்தல் தந்த வெற்றி, தி.மு.க.வை மட்டுமல்லாது, அதன் கூட்டணிக் கட்சியினரையும் உற்சாகத்தில் ஆழ்த்தியுள்ளது. மேலும் கலைஞர் செயல்படுத்திய திட்டங்கள் தாய்மார்கள் மத்தியில் மிகப் பெரிய அளவில் எழுச்சியை உண்டு பண்ணியிருக்கின்றன. திருமங்கலம் வெற்றி, நாடாளுமன்றத் தேர்தலிலும் எதிரொலிக்கும். ஒரு மாணவன் போன எக்ஸாம்ல நல்ல மார்க் வாங்கியிருந்தான்னா, அடுத்த எக்ஸாம்லயும் அதைத்தானே

எதிர்பார்ப்பான். மாணவனுக்கு எக்ஸாம்; எங்களுக்கு எலெக்ஷன்.''

**இலங்கைப் பிரச்னையில் தி.மு.க., காங்கிரஸின் நிர்பந்தத்துக்குப் பணிந்துவிட்டது என்கிறார்களே?**

''அப்படிச் சொல்வது அபத்தம். இன்னும் சொல்லப்போனால் இலங்கைத் தமிழர் நலனுக்காக தி.மு.க. குரல் கொடுக்கும் போதெல்லாம், அதற்கு ஆதரவாக நீள்வது காங்கிரஸின் கரமாகத்தான் இருந்திருக்கிறது. கலைஞர், தமிழக எம்.பி.க்கள் ராஜினாமா என்ற முடிவை எடுத்த போதும், மனிதச் சங்கிலிப் போராட்டம் என்று அறிவித்தபோதும், இப்போது இலங்கைத் தமிழர் நலனுக்காக தி.மு.க. பிரசாரம் செய்கிறபோதும்... தமிழக காங்கிரஸார் காட்டிய ஆர்வமே இதற்கு உதாரணங்கள். நீங்கள் சொல்வது போல சிலர் சுயநலத்துடன் பேசி வருவது உண்மைதான். அவர்களின் வேஷம் விரைவில் வெளுக்கும்.''

**மதுரை தொகுதியின் எம்.பி.யாக நீங்கள் போட்டியிடப் போவதாக உங்களைச் சேர்ந்தவர்கள் சொல்கிறார்கள். நீங்களோ மௌனமாக இருக்கிறீர்கள்... மௌனம் சம்மதத்தின் அறிகுறியா...?**

''நான் முன்பே சொன்னதுபோல கட்சித் தலைமை என்ன முடிவு செய்கிறதோ அதை ஏற்றுக்கொள்வது தான் தி.மு.க.வின் மரபு. நான் ஏற்றிருக்கும் தென் மண்டல அமைப்புச் செயலாளர் பதவிகூட, தலைவரும் பேராசிரியரும் இணைந்து பேசி எடுத்த முடிவுதான். அதேபோல கட்சி கட்டளை இட்டால், கண்டிப்பாக மதுரைத் தொகுதி எம்.பி.யாகப் போட்டியிடுவேன்!''

**- கதிர்பாரதி,**

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

படங்கள் : **நௌஷாத்**



- தமுஎச - 34
- உயிர்பெறுமா உலகத் தமிழ்ச் சங்கம்?
- அலைக்கழிக்கும் அலங்காநல்லூர்!
- மீனாட்சி மகிமை
- மல்லிகை சக்கரவர்த்தி
- கருப்பண்ணஸ்வாமியின் கருணை
- அகவிழி இல்லத்தின் புறவிழி...

"இது ஹலோ எஃப்.எம். நான் உங்கள் அனுயா. நம்ம கல்கிக்காக சார் இன்டர்வியூ பண்ண வந்திருக்காரு. இப்போ என்ன பேசப் போறோம்னா..." என்று அனுயா ரேடியோ ஜாக்கி பாணியில் நான்-ஸ்டாப்பாகப் பேசிக் கொண்டிருக்க, "மேடம் கேட்கிற கேள்விக்குப் பதில் சொல்லுங்க போதும்" என்று பிரேக் போட்டோம்.

**அனுயா... உங்களைப் பற்றிச் சொல்லுங்களேன்...**

"அனுயா என்றால் ஆச்சரியமான சந்தோஷம் என்று அர்த்தம். (நீங்களே ஆச்சரியமான சந்தோஷந்தானுங்களே?) நான் வளர்ந்ததெல்லாம், புனேயில். புனே திரைப்படக் கல்லூரியில் ஆக்டிங் பயிற்சி முடித்தவுடன், இந்தியக் குழந்தைகள் திரைப்படக் கழகம் தயாரித்த 'மஹேக்' படத்தில் டீச்சராக நடிக்க வாய்ப்பு கிடைத்தது. எனது அப்பா, அம்மா இருவருமே டாக்டர்ஸ்."

**சிவா மனசுல சக்தி படத்தில் திருமணத்துக்கு முன்பே காதலர்கள் பாலுறவு கொள்வது போலக் காட்சி வருகிறதே? இதற்கு நீங்கள் சப்போர்ட் செய்கிறீர்களா?**

"எஸ்.எம்.எஸ். படத்தில் என் கேரக்டர் அப்படி இருந்ததால் நான் இதற்கு சப்போர்ட் செய்வதாக அர்த்தமில்லை. லவ்வர்ஸ் திருமணத்துக்கு முன் பாலுறவு வைத்துக் கொள்வது தவறா

# டெலிவிஷன்

## - SMS அனுயா பேட்டி

னது. ப்ரீமெரிடல் செக்ஸ் என்ற சிந்தனையே நமது கலாசாரத்துக்கு எதிரானது.''

**மும்பையிலும், பெங்களூரிலும் பெண்கள் பார்களுக்குச் செல்கிறார்களே?**

''பார்களுக்குச் செல்வது அவரவர் தனிப்பட்ட விஷயம். பேரண்ட்ஸ்தான் இதுபோன்ற செயல்பாடுகளைக் கண் காணித்து பிள்ளைகளைத் திருத்த வேண்டும்.''

**கர்நாடகாவில் ராம் சேனா அமைப்பினர் காதலர் தினத்தன்று பொது இடங்களில் சுற்றும் காதலர்களுக்குக் கல்யாணம் செய்து வைத்தார்களே, இது பற்றி உங்கள் கருத்து?**

**ராம்சேனா அமைப்புக்கு மகளிர் அமைப்பு 'ஜட்டி'களை அனுப்பியது மோசமான நாகரிகம்!**

''ராம்சேனா செயல் அநாகரிகமானது. 'காதல்' என்பது இரண்டு உள்ளங்கள் சம்பந்தப்பட்டது. இதற்கு எதிர்ப்பு தெரிவிக்கிறோம் என்று ராம்சேனா அமைப்புக்கு சில பெண்கள் அமைப்புகள், ஜட்டிகளை அனுப்பியது அதைவிட மோசமானது. நம் எதிர்ப்பைத் தெரிவிக்க எத்தனையோ நாகரிகமான வழிமுறைகள் இருக்கையில் இது மோசமான முன்னுதாரணம்.''

# தான் நம்பர் ஒன்!

**ரேடியோ, சினிமா, டெலிவிஷன் - இந்த மூன்றில் சமூகத்துக்கு ஏற்ற ஊடகம் எது?**

''நடிகர்-நடிகைகளுக்கு திறமையை முழுமையாக வெளிப்படுத்துவதில் சினிமா தான் சிறந்த மீடியம். ஆனால் சமூகப் பிரச்னைகளை மக்களிடம் கொண்டு செல்வதில் இன்றைய தினத்தில் டெலிவிஷன் தான் நம்பர் ஒன்னாக இருக்கிறது.''

**வருகிற பாராளுமன்றத் தேர்தலில் பிரசாரத்துக்குச் செல்வீர்களா?**

''என்ன சார் விளையாடறீங்களா? நான் இப்பத்தான் ஒன்றிரண்டு படத்துல வந்திருக்கேன். முதல்ல நல்லா நடிச்சு மக்கள்கிட்ட பேர் வாங்கினதுக்கு அப்புறம்தான் தேர்தல் பிரசாரம் செய்யணும். அன்னைக்கு இருக்கிற சூழ்நிலைல எந்தக் கட்சி எனக்குப் பிடிச்சிருக்கோ அந்தக் கட்சிக்கு நிச்சயமா பிரசாரம் செய்வேன்.''

**உங்களுக்குப் பிடித்த உணவு?**

''தயிர் சாதம்''

**பிடித்த கலர்?**

''வெள்ளை''

**பிடித்த நடிகர்?**

''கமல்ஹாசன்.''

**யார் டைரக்ஷனில் நடிக்க ஆசை?**

''மணிரத்னம்.''

**உங்களைப் போன்று அழகாக இருக்க ஏதாவது டிப்ஸ்?**

''இரவு தூங்கப் போகும் முன்பு குளிர்ந்த நீரால் முகத்தைக் கழுவிட்டுப் படுத்தால் மறுநாள் முழுவதும் புத்துணர்ச்சியோடு இருக்கும்.''

**சிவா மனசுல சக்தி? உங்க மனசுல யாரு?**

''யாராவது மனசுக்குள்ள வந்தால் கல்கிக்கு கண்டிப்பா சொல்லி அனுப்பறேன்.''

**- ராகவ்குமார்**

## ஹாய் டார்லிங் 9

**செ**ந்திலும், தமிழரசியும் திருமண மாகி, ஒரு வருடத்தில் பிரியும்படி ஆனது மிகவும் துரதிர்ஷ்டவசமானது. தமிழரசி யின் அனுபவத்திலிருந்து ஒரு விஷயத் தைப் புரிந்துகொள்ள வேண்டும். உங் களுக்கு ஒரு விஷயம் பிடிக்கவில்லையா? அதற்குக் காரணம் என்ன என்று உங்களை நீங்களே கேட்டுக் கொண்டு, விடை கண்டு பிடியுங்கள். அதன் பிறகு, உங்களுக்கு முழு சம்மதம் இல்லாதுபோனால், கண் டிப்பாக ''நோ'' சொல்லிவிடுங்கள். அதற்கு என்ன காரணம் என்பதையும் தெளிவாகச் சொல்லுங்கள். உள்ளூர சம்மத மில்லாமல், மற்றவர்கள் வற்புறுத்துகிறார் கள் என்பதற்காக, உங்களுடைய எண் ணத்தை ஒதுக்கிவைத்துவிட்டு, சம்மதம் தெரிவித்தால், அதனால் பாதிப்பு உங் களுக்கு மட்டுமில்லை; உங்களுடைய புகுந்த வீட்டினருக்கும், பிறந்த வீட்டி னருக்கும்கூட என்பதை மனத்தில் ஆழமா கப் பதிய வைத்துக் கொள்ளுங்கள்.

பல சமயங்களில் ஆண்கள்கூட, இம் மாதிரியான சூழ்நிலைக்குத் தள்ளப்படு கிறார்கள்.

அதே நேரம், இப்படி பெற்றோர்களின் வற்புறுத்தலுக்கு வளைந்து கொடுத்து நடக்கும் திருமணம் என்றாலே, அது விவாகரத்தில்தான் போய் முடியும் என்ற முடிவுக்கும் வந்துவிட வேண்டாம். டேவிட் 25 வயதுடைய வங்கி அதிகாரி. ஆபீசில் கடுமையாக உழைத்து, நல்ல பெயர் எடுத்தவர். வார இறுதி நாட்களில் ஆதரவற்ற குழந்தைகள் இல்லத்துக்குச் சென்று சில மணி நேரம் செலவிடுவதை வழக்கமாகக் கொண்டவர்.

ஒரு நாள் டேவிட்டின் அம்மாவுக்கு திடீரென நெஞ்சு வலி ஏற்பட, உடனடி யாக ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டு சிகிச்சை அளித்து, அவரைக் காப்பாற்றி விட்டார்கள். ''வந்தது மைல்டு ஹார்ட் அட்டாக். இனி எச்சரிக்கை யோடு இருக்கணும்; இன்னொரு அட்டாக் வந்தால் டேஞ்சர்!'' என்று டாக்டர் சொல்லிவிட, ஆஸ்பத்திரியிலிருந்து வீடு திரும் பியது முதல், தன் மகனிடம், ''டேய்! சீக்கிரமா ஒரு கல்யாணத் தைப் பண்ணிக்கடா... என் மூச்சு நிற்பதற்குள் என் மருமகளை நான் பார்க்கணும்'' என்று புலம்பத் தொடங்கி விட்டார் அம்மா.

ஆரம்பத்தில் இதை டேவிட் சீரியசாக எடுத்துக் கொள்ள வில்லை என்றாலும், நாள டைவில் டேவிட்டின் அப்பாவும், அம்மாவுடன்

## விவாக - விவகாரம்!



சேர்ந்துகொண்டார். தினமும் இந்த நச்சரிப்பு தொடர,

ஒரு கட்டத்தில் பெற்றோர்களின் வற்புறுத்தலுக்கு டேவிட் வளைந்து கொடுக்கும்படியானது. நாலைந்து பெண்களைப் பார்த்து, அவர்களுள் ஒருவரைத் தேர்ந்தெடுப்பதில் டேவிட்டுக்கு இஷ்டமில்லை. அம்மாவோ அவசரப்படுத்துகிறார். வேறுவழியின்றி மூன்றாவது வாரத்தில் டேவிட்-நான்சி திருமணம் நடந்து முடிந்தது.

''நீ ஆசைப்பட்டபடி மருமகள் வந்தாச்சு! இப்போ சந்தோஷமா?'' என்று டேவிட் தன் அம்மாவிடம் கேட்க, மிகுந்த சந்தோஷத்துடன் மகனையும், மருமகளையும் அணைத்து முத்தமிட்டார்.

ஜோடிப் பொருத்தம் என்று பார்த்தால், டேவிட் ஒல்லியான, உயரமான தேகம்; நான்சியோ சற்று குள்ளம்; கொஞ்சம் பூசினாற்போல உடம்பு. ஆனால் இதெல்லாம் அவர்களுக்குப் பெரிய வித்தியாசமாகத் தோன்றவில்லை. டேவிட்டின் அம்மாவின் பிரஷர் காரணமாகத்தான் அவர்கள் திருமணம் நடந்தது என்றாலும், திருமணத்துக்குப் பிறகு இரண்டு பேருக்குமே ஒரு நல்ல அண்டர்ஸ்டாண்டிங் ஏற்பட்டது. வற்புறுத்தல் காரணமாக நடந்த திருமணம் என்பதற்கான அறிகுறி துளியுமில்லாமல் அவர்கள் மணவாழ்க்கை அமைந்தது.

ரேடியோ ஜாக்கி கஷ்மிதா, செந்தில்-தமிழரசி, டேவிட்-நான்சி இவர்களைப் பற்றி நான் அடுத்தடுத்து சொன்னதற்கு என்ன காரணம்? இன்றைய இளையதலைமுறையினர் வளரும் சூழ்நிலை, முந்தைய தலைமுறையினர் வாழ்ந்த சூழ்நிலையிலிருந்து முற்றிலும் மாறுபட்டது. ஆண்-பெண் சமத்துவம் முன்னேறியிருக்கிறது. இருபாலருமே மிகக் குறைவான வயதிலேயே மிக அதிகச் சம்பளம் வாங்குகிறார்கள். அன்று ஒட்டலுக்குப் போய்ச் சாப்பிடுவது என்பது அனாவசியமான செலவாகப் பார்க்கப்பட்டது. இன்று மாதம் சில தடவைகளாவது குடும்பத்துடனோ, நண்பர்களுடனோ ஒட்டலுக்குப் போவது வாழ்க்கையை அனுபவிக்கும் ஒரு விஷய

**உங்களுக்கு ஒரு விஷயம் பிடிக்கவில்லையா? அதற்குக் காரணம் என்ன என்று உங்களை நீங்களே கேட்டுக்கொண்டு, விடை கண்டுபிடியுங்கள்.**

**டாக்டர் விஜய் நாகஸ்வாமி**

மாகக் கருதப்படுகிறது.

பெற்றோர்கள், தங்கள் பிள்ளைகள், பெண்களின் அறிவை, திறமையைப் பாராட்டுகிறார்கள். இளம்வயதிலேயே பெரிய பொறுப்புக்கள்ள ஏற்று திறமையுடன் செயல்படுவதையும், ஆபீஸ் வேலையாக அயல்நாடுகளுக்கு அனுப்பப்படுவதையும் பெருமையாக நினைக்கிறார்கள். அவர்களுடைய வேலை பளுவையும், நீண்ட பணி நேரத்தையும், மனஅழுத்தம் நிறைந்த வாழ்க்கையையும் கூடப் புரிந்து கொள்கிறார்கள்.

பிறந்தது முதல் தங்கள் குழந்தைகளின் அத்தனை தேவைகளையும் ஆசையாய், பாசமாய் பார்த்துப் பார்த்து செய்து வளர்த்த பெற்றோர்கள், அவர்கள் வளர்ந்து பெரியவர்களான பிறகும், தங்கள் பிள்ளைகள்/ பெண்கள் வளர்ந்து விட்டார்கள்; அவர்கள் சுதந்திரமான மனிதர்கள்; அவர்களுக்கு சுயமாகச் சிந்திக்கும் திறன் உள்ளது; இனி நாம் அவர்களுக்கு அவசியமான போது ஆலோசனைகள் சொல்லலாமே தவிர, அவர்களுக்காக முடிவுகளை எடுத்து, அந்த முடிவுகளை அவர்கள் மீது திணிக்கக்கூடாது என்பதை மட்டும் அடிக்கடி மறந்து விடுகிறார்கள்!



**ஜோடிப் பொருத்தம் இல்லாதது ஒரு பொருட்டாகத் தோன்றவில்லை. வற்புறுத்தல் காரணமாக நடந்த திருமணம் என்பதற்கான அறிகுறி துளியுமில்லை.**

குறிப்பாக, திருமணப் பேச்சு வருகிறபோது, "இத்தனை நாளும் அவர்களுக்கு எது நல்லது? எது கெட்டது? என்று நாங்கள்தானே முடிவு செய்தோம்? ஆனால், திடீரென்று இப்போது நீங்கள் தலையிட வேண்டாம்; நாங்களே முடிவு செய்துகொள்வோம். எங்களுக்கு அந்த மெச்சூரிட்டி இருக்கிறது என்று சொல்கிறார்களே?" என்று ஆதங்கப்படுகிறார்கள்! அவர்களால் ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை.

ஏன் இந்த முரண்பாடு? இதற்கு என்ன தீர்வு?

**(அழைப்பு தொடரும்)**

எழுத்தாக்கம் : **எஸ்.சந்திரமௌலி**

**குறிப்பு : இத்தொடரில் இடம்பெற்றுள்ள படங்களுக்கும், மனிதர்களுக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை!**

# கதவைத் திற...!



மந்திரச் சொல்

**வா**ழ்க்கை என்பது என்ன?

படிப்பு, திருமணம், குழந்தைகள், வேலை, வருமானம், வீடு, சொத்து... இப்படித்தான் பெரும்பாலும் நாம் அடுக்குவோம். ஆனால், நாம் வாழ்கிறோமா என்றால் 'இல்லை' என்று உணர்த்துகிறார் இந்தியாவின் தலைசிறந்த தத்துவஞானிகளில் ஒருவரான ஜே.கிருஷ்ணமூர்த்தி!

'நேற்றின் கவலைகளைச் சுமந்து கொண்டும், நாளையைப் பற்றிய அச்சத்தால் நடுங்கிக் கொண்டும் இன்று உயிரோடிருக்கிறோம். அவ்வளவுதான். ஆனால், வாழ்தல் என்பது ஒவ்வொரு கணத்திலும் நிகழ்காலத்தோடே ஒன்றியிருப்பதுதான்' என்று உணர வைக்கிறார் ஜே.கே.

மனிதனை, அவன் மனத்தை, மனத்தின் இயல்பை ஸ்பேர் பார்ட்ஸ் மாதிரி அக்கு வேறு ஆணிவேறாகக் கழற்றி அலசிக் காயப்போடுவது ஜே.கே.யின் பாணி!

★ விழிப்புணர்வு என்பது என்ன? மனத்தில் என்ன நடக்கிறது என்பதைக் கூர்ந்து கவனித்து அறிவதுதான்!

★ இனம், மதம், மொழி, கலாசாரம், தேசியம்... இப்படி மனத்துக்குப் பல கட்டுப்பாடுகள். இது ஒரு சிறைச்சாலை போலத் தோன்றுகிறது.

★ எது நடந்தாலும், அதை நிகழ்காலத்தில்தான் சந்திக்க முற்பட வேண்டும். சுதந்திர மனத்தில்தான் நிறைய ஆற்றல்கள் பரிமளிக்கும்.

★ நாம் தெரிந்தவற்றைக் கண்டு மட்டுமல்ல; தெரியாதவற்றை நினைத்தும் பயப்படுகிறோம்.

★ அன்பில்லாத உள்ளத்தில் பண்பற்ற தன்மைதான் இருக்கும்.

★ உண்மைதான் கடவுள். அது எந்த மத அமைப்பிலும் அடங்காது.

- இவை ஜே.கே.யின் சில கருத்துக்கள். கொஞ்சம் ஆழ்ந்து படியுங்கள். வாழ்வின் நிகழ்கால மதிப்பை உணர்த்தும் கருத்துக்கள் உங்களின் மனக் கதவைத் திறந்து வெளிப்படும்.

– ராகவன்

# நாங்கள் சோம்பேறிகள்!

## — வா.மு.கோமு பேட்டி!

வா.மு.கோமகன் என்னும் வா.மு. கோமு நவீன தமிழ் இலக்கியத்தில் கடந்த இருபது ஆண்டுகளாக தீவிரமாய் இயங்கி வருகிறார். ஈரோடு மாவட்டம், வாய்ப்பாடியில் வசிக்கிறார். நான்கு சிறுகதைத் தொகுப்புகளும், ஒரு நாவலும், 'சொல்லக் கூசும் கவிதை' எனும் கவிதைத் தொகுப்பும் இவரது படைப்புகள். சுவாரஸ்யமான நடையை ஆதாரமாகக் கொண்ட இவரது எழுத்து, சமீப காலமாக மிகுந்த அதிர்வலைகளை எழுப்பி வருகின்றது. நடுகல், இறக்கை எனும் சிறு பத்திரிகைகளை நடத்தியிருக் கிறார்.

'கூப்பிடுவது எமனாகவும் இருக்க லாம்' என்ற இரண்டாவது நாவலின் நூலாக்கப் பணியில் தற்போது ஈடுபட்டி ருக்கிறார். அவர் கல்கி வாசகர்களிடம் தமது அபிப்ராயங்களைப் பகிர்ந்து கொள்ளும் பேட்டியாக....

***எப்படி எழுத ஆரம்பித்தீர்கள்?***

குமுதம், விகடன், கல்கி என்று படிக்க ஆரம்பித்தேன். இந்தக் காலகட்டத்தில் புஷ்பா தங்கதுரை, ராஜேந்திரகுமார் அறிமுகமானார்கள். ராஜேந்திரகுமாரின் 'வே'வை இன்னும் மறக்க முடிய வில்லை. அப்பாவின் மேஜையில் இருந்த கசட தபற, விழிகள், தீபம், மல்லிகை போன்ற சிற்றி தழ்கள் என்னை எழுதிப் பார்க்கத் தூண்டின. எழுதி, எழுதி எல்லாவற்றையும் தூக்கிக் கடாசிவிட்டு 'இதோ வந்துட்டேன் பார்' என 'நான் கடவுள்' ஆர்யா கைக்கு கட்டை கொடுத்து அமர்ந்திருப்பது மாதிரி வந்து அமர்ந்திருக்கிறேன்.

***உங்கள் எழுத்து பாலியல் சார்ந்தே இருக்கின்றது. அதன் அவசியம் என்ன?***

தாகம், பசி மாதிரி இயல்பான உணர்ச்சி தான் பாலியலும். இயல்பான இந்த உணர்ச்சிகள் மீதுதான் சமூகத்தின் நீதி, நியதிகள் கட்டமைக்கப்பட்டுள்ளன. இவை கேள்விக்கு உள்ளாக்கப்பட வேண் டாமா?

பாலியல் உறவுகளை மட்டும் வைச்சுக் கிட்டு நீதி, நியதிகளை நிர்ணயம் செய்யக் கூடாது. வாழ்வியல் அறம் என்பதை பாலியல் உறவை மட்டும் வைத்து தீர்மானிக்க முடியாது. அதைத் தாண்டியும் பல விஷயங்கள் உள்ளன. இந்த நிலை நீடிக்கற வரைக்கும் என் படைப்புகள் அப்படித்தான் இருக்கும். எதைப் புனிதம், தூய்மை என்கிறீர்களோ அதை உடைப் பதுதான் என் வேலை.

***பெண் பெயரில் பாலியல் கவிதைகள் எழுதுகிறீர்கள். ஏன் பெண் அடையாளத் தைத் தேர்ந்தெடுத்தீர்கள்...?***

ஆண்கள் பாலியல் பற்றி எழுதினால் சமூகம் வரவேற்கிறது. ரசிக்கிறது. பெண் எழுதினால் ஒழுக்கம் கெட்டுவிட்டதாய்ப் பேசுகிறார்கள். அதை உடைப்பதற்காகச் செய்த சிறு பணி அது. பெண் எழுத்தில் இன்னும் நிறைய போதாமைகள் இருக்கு. வெளிப்படையா "தூள் கிளப்பிட்டு வாங்க ளேன்'' என்கிற அழைப்பாக, அந்தக் கவிதைகளை நீங்கள் பார்க்கலாம்.

**சாரு நிவேதிதா தம் இலக்கிய வாரிசாக உங்களை அறிவித்தார். அவரை எப்படி திருப்திப்படுத்தினீர்கள்?**

சாருதான் வாரிசென அறிவித்தார். ஆனாலும், நான் அவரோட வாரிசு அல்ல. பாலியல் சம்பந்தப்பட்ட கட்டமைப்புகளை உடைக்கிற பணியை அவருடைய எழுத்து செய்வதில்லை. பாலியல் வக்கிரம் மட்டும்தான் அவர் செய்வது. ஏறக்குறைய எழுத்தில் வன்புணர்ச்சி. என்னுடைய எழுத்துக்கள் விளிம்பு நிலை மக்களின் பாலியல் உறவுகள் சார்ந்தவை. இரண்டு பேருடைய பயணமும் வேறு வேறு பாதையில். அப்புறம் எப்படி நான் அவருடைய வாரிசுங்கறது? எனக்கு இத்தனை நாள் கழிச்சும் புரியலை.

இதைவிடப் பெரிய கொடுமை சாரு நிவேதிதான்னா சூப்பர் பிகரா இருக்கும்னு ரொம்ப நாளா நினைச்சுக்கிட்டு இருந்தேன். என்னோட 'மண்பூதம்' சிறுகதைத் தொகுதி வெளியீட்டுக்கு சென்னை வந்தப்ப, 'இதுதான் சாரு நிவேதிதா'ன்னு ஒரு பெரியவரைக் காட்டினாங்க. என் காதல், காமம் எல்லாம் மளார்னு ஸ்பார்ட்லயே செத்துடுச்சு. தவிர, கோமுன்னா ஏதோ மாமின்னு நெனைச்சேன்னு ஒரு பெருசு என்கிட்ட சொல்ல, தானிக்கும் தீனிக்கும் சரியாப் போச்சு.

# வாழ்வியல் அறத்தை பாலியல் மட்டுமே தீர்மானிப்பதில்லை.

**சிறுபத்திரிகைகளில் எழுதும்போது குறைவான நபர்களையே சென்றடைகிறது. அதிகமான வாசகப் பரப்பை ஏன் புறக்கணிக்கிறீர்கள்?**

நாங்கள் யாரும் பெரும் வாசகப் பரப்பைப் புறக்கணிக்கவில்லை. இயல்பாகவே நாங்கள் சோம்பேறிகள். சற்று தாமதமாக வருகிறோம். அதுவரை அந்தப் பெரும் வாசகப் பரப்பு காத்திருக்கட்டும்.

**சிறு பத்திரிகையிலிருந்து திரைப்படத்துக்கு நகர்வதுதான் ஆகச் சிறந்ததென இலக்கியவாதிகள் கருதுகிறீர்களா?**

இனி ஒரு கட்டட வேலைக்குப் போயி கல்லு, மண்ணு சுமந்து என் வீட்டு அங்கத்தினர்களுக்கு புவ்வா போட முடியாது. படைப்பு எழுதியும் புவ்வாக்கு வழி பண்ண முடியலை. மண்டையில கொஞ்சூண்டு விஷயம் இருந்தா போதும். யார் வேணாலும் திரைப்படத்துறைக்கு போய் புவ்வாக்கு வழி பண்ணிட முடியும். அதனால திரைப்படம் நோக்கி நகர்வதுதான் ஆகச் சிறந்த, எளிய வழி.

**- ஜானகிராமன்**


★ வா.மு.கோமு

"உன்னோட எக்ஸ்பிரஸ் சேலம் ஸ்டேஷனில் நிற்க சில நிமிடங்களே பாக்கி என்று மாம்பழத்திலிருந்து உரித்தெடுத்த வாசனையைக் கடத்தி வந்து மூக்குக்கு முன்னால் போட்டுவிட்டுச் சொன்னது காற்று. சேலத்துக்கு அடுத்து என் சொந்த ஊர். மனம் பக்பக்னு அடிச்சிக்கிட்டது. இலேசா வியர்க்கவும் ஆரம்பிச்சது. ஷக்தி எக்ஸ்பிரஸில் ஏறி உட்கார்ந்ததிலிருந்தே படபடப்பாயிட்டாள். ரூபன் தூங்கிக் கொண்டிருந்தான். 'சூர்யா ஒண்ணும் பிரச்னையாகாதே? அவமானப்படுத்த 'மாட்டாங்க இல்ல?' வண்டியில் ஏறியதிலிருந்து இதே கேள்விதான். ஜெராக்ஸ் எடுத்தா மாதிரி கேட்டுக்கிட்டே இருக்கா. இருக்காதா பின்னே. காதல் கல்யாணம் அதுவும் சாதி விட்டு சாதி. வேலை செய்ய

# கனவு ஓர் அகதி!

வந்த மெட்ராஸில், வாழ்க்கையின் வேர் முளைக்கும்னு யாருக்குத் தெரியும்? காதல் வாழ்க்கையின் வேர்தான். 'என் முகத்தில் அவன் விழிக்கக் கூடாது' - அம்மா. 'இன்னொரு முறை ஊரில் கால் வெச்சா நடக்கிறதே வேற' - சாதி சனங்க. அப்பா ஒரு குடம் தண்ணியைத் தலையில ஊத்திக்கிட்டு என் போட்டோவ குப்பைத் தொட்டியில போட்டதா ஒரு தகவல். அம்மாவுக்கு உடம்பு ரொம்ப மோசமாயிட்டதுன்னு கேள்விப்பட்டு துணிச்சலை செயற்கையா வரவைச்சு ஐந்து வருட இடைவெளிக்குப் பின் ரூபன் (ரூபுக்குட்டி), ஷக்தியோட சொந்த ஊர்ப் பயணம். த்ரில்லான டிராவல்.

வண்டி சேலத்தில் நின்றபோது ஷக்தி சொன்னாள். 'ஏங்க எதிரே இருக்கும் ஸ்டால்ல மாம்பழம் வாங்குங்களேன்'. அம்மாவுக்குப் பிடிச்ச ஒரே பழம் மாம்பழம்தான் என்றது என் ஞாபகக் கோப்பின் ஒரு குறிப்பு. 'தோ வந்துடறேன்'னு வாங்கப் போனேன். ஸ்டேஷனில் திடீரென கூச்சல் குழப்பம், என்னவென்று யூகிக்கும் முன்பே எக்ஸ்பிரஸ் கிளம்ப ஆரம்பித்து விட்டது. 'ஏங்க... ஏங்க...'ன்னு ஷக்தி கூச்சலிட, 'ஐயோ அவளுக்கு மெட்ராஸைத் தவிர வேற இடம் தெரியாதே.. மனம் பதற என்ன செய்வது என்று புத்தி முடிவெடுக்கத் திணறியபோதுதான் தோன்றியது. ஸ்டேஷன் மாஸ்டரின் சைக்கிளை எடுத்து தண்டவாளத்தில் வைத்து மிதிக்க ஆரம்பித்தேன். தண்டலான குறுக்கு கட்டைகளில் சைக்கிள் டயர் நகர முடியாமல் தடுக் படுக்னு குலுங்க, பயமும், படபடப்புமாய் எக்ஸ்பிரஸ் டிரெயினைப் பிடிக்க தண்டவாளத்தில் சைக்கிளை மூச்சிறைக்க மிதிச்சிக்கிட்டு ஓட்டினேன். இதுதான் மாமு என் கனவு. எக்ஸ்பிரஸைப் பிடிக்க, மனைவி மக்களை மீட்க

சைக்கிள்ல போறது அபத்தமா இல்ல. இதுக்கு என்னடா அர்த்தம்?'' என்று கேட்டேன். நெறைய படிச்சிருக்கிற ஆகாஷ் எல்லா கனவுகளுக்கும் பலன் சொல்றதில் கில்லாடி.

''வாழ்க்கையைத் தொலைக்கப் போறேன்னு அர்த்தம்'' என்று சொல்லி சோகமானான் ஆகாஷ். எனக்குக் கனவை விட இவனின் பலன்தான் பயத்தைத் தந்தது. ஆகாஷ் என்னை என் கால்களைப் பார்த்தான். பெர்முடாஸ் போட்டிருந்த எனது கால்களை உற்றுப்பார்த்தவன் சொன்னான். ''இப்ப நீ குடிக்க ஆரம்பிச்சிட்ட. நைட்ல குடிச்சிட்டுப் படுத்திருக்கே. கால்ல வண்டு மாதிரி ஏதோ கடிச்சிருக்கு. அதைத் தட்டி விட உன்னால எழுந்துக்க முடியல. காலை உதற மூளைக்குத் தெரிஞ்ச ஒரே பதிவு சைக்கிள் ஓட்டறதுதான். பரபரப்பும் பதற்றமும் இருக்கணும்னு மூளை செஞ்ச கதை அந்த ட்ரெய்ன் மிஸ்ஸாவது'' என்றான். என்னோட காலை அப்போதுதான் பார்த்தேன். வண்டு கடித்த சிவந்த அடையாளம். ''கனவு எப்படி உரு வாவதுன்னு நான் சொன்ன கதை உண்மைன்னா, குடிக்க ஆரம் பிச்சிருக்கிற உனக்கு வாழ்க்கை தொலையப் போறது என்பதும் கனவின் முன்னெச்சரிக்கையான பலன்தான். குடிக்கிறதை நிறுத்திடு'' சொல்லிவிட்டு விர்ரென்று கிளம்பி னான் ஆகாஷ். கனவும் ஒரு அசரீரிதானோ? இப்போது மன செல்லாம் முளைக்கத் துவங்கி யது பயம். ●

**''இப்ப நீ குடிக்க ஆரம்பிச்சிட்ட... வாழ்க்கையைத் தொலைக்கப் போறேன்னு அர்த்தம்''**



**சசி**




- பரசை சிவன்

''பழைய ஜெயில் எப்படியிருக்குன்னு பார்க்க வந்தியா?''

''ஜெயிலுக்குப் போனா தாண்டா உனக்கு புத்தி வரும்ன்னு அப்பா சொன்னார். அதனாலே பார்க்க வந்தேன்.''

# தர்ம ராஜ்யம்

அருள்வாக்கு



உண்மையான சுயராஜ்யமானால், நம்முடைய சுதந்திரப்படி நடத்தும் சட்டசபை எனில், நம்முடைய தர்ம ராஜ்யம் ஆதியில் எப்படி இருந்தது, அதை மீண்டும் கொண்டு வர என்ன செய்ய வேண்டுமென்பதை ஆலோசிக்க வேண்டும். நமக்கென்று ஒரு பண்பாடும், நாகரிகமும் உண்டு. இருக்கட்டுமே. அதையே ஏன் கட்டிக் கொண்டு அழவேண்டுமென்றால், 'நமது' என்கிற வெறும் பாசத்துக்காக இப்படிச் சொல்லவில்லை. எத்தனையோ புராதன நாகரிகங்கள் காலப் பிரவாகத்தில் அடித்துக் கொண்டு போனபோதிலும், நம் பண்பாடும், நாகரிகமும் பாறாங்கல் போல எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளாக நிலைத்திருப்பதாலேயே இதற்கு ஒரு விசேஷம் இருக்கத்தான் செய்கிறதென்று உணர்ந்து, அதையே நாமும் அனுசரித்து வாழ வேண்டும். நாம் நாமாக இருக்க வேண்டும். எவ்வளவு பலம் நமக்கு உண்டோ அவ்வளவையும் நம்மை நிஜமான நம்மவர்களாக்குவதில் உபயோகப்படுத்த வேண்டும்.

வெள்ளைக்கார வேஷத்திலே உள்ள நம்மவர்கள் சட்டம் செய்கிறார்கள், அதற்கு அடிமையாக நாம் இருக்கிறோம் என்றால், அதில் சுதந்திரத்தின் சாரமே இல்லை. நம்முடைய சம்பிரதாயங்களை அனுசரிக்காதவர்களுக்கு வோட்டுக் கொடுத்து வரும் ராஜ்யம் அடிமை ராஜ்யம்தான். லௌகிக விஷயங்கள் கூட ஆத்ம சம்பந்தமாகவும், தெய்வ சம்பந்தமாகவும் இருந்த அந்த முறைதான் நம்முடையது.

தர்மம், தொழில்முறை முதலியவற்றை அறிந்தவர்களையும், அனுஷ்டானம், ஒழுக்கம் உடையவர்களையுமே ராஜ்ய நிர்வாகத்தில் வைத்துப் பார்க்க வேண்டும். அவர்கள் நம்முடைய சாஸ்திரப்படி தர்ம ராஜ்யத்தை ஸ்தாபித்து இது நன்றாக நடக்கிறது என்று காட்டி, மற்ற தேசத்தவர்களும் இதை அனுசரிக்கச் செய்ய வேண்டும்.

**- ஜகத்குரு காஞ்சிகாமகோடி ஸ்ரீசந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

# 8

# காற்று

பூவரச மரத்திலிருந்து பழுத்த இலைகளும், மஞ்சள் பூக்களும் அந்தக் காற்றோடு இறங்கிக் கொண்டிருந்தன. கோவிந்து சின்னச்சாமி டீக் கடையில் உட்கார்ந்திருந்தான். பக்கத்தில் நாகு. அங்கு உட்காருவதற்கென்றே சில பிறவிகள். அதற்குத்தான் பிறப்பெடுத்தாற்போல் வந்து உட்கார்ந்து விடும். இப்படி வந்து உட்கார்ந்து விட்டால் போதும். ஊரையே பார்த்துவிடலாம். ஒரு டீயோ, வடையோ கையில் வாங்கி வைத்துக்கொண்டால் போதும். ஊர் சங்கதி எல்லாம் உறிஞ்சி விடலாம்.

''ஏலெ, மொக்க, நேத்து நடந்த கூத்து தெரியுமாடா?''

''சொல்லு.''

''நம்ம கிங்காங்குப் பய பெண்டாட்டிய அனுக்குள்ள பாத்தியாடா?''

''ம். பாத்துச்சு.''

''என்னத்தக் கண்ட?''

அவன் ஒருகணம் யோசித்தான்.

பாரதிபாலன்

# வரும் பருவம்

''பின்ன பாத்தேங்குறவன்?''

''என்னவாம்?''

''ஒரு தினுசா நடக்குறாளா?''

''ம்.''

''நம்ம கிங்காங்கு சம்சாரம் இருக்காம்ள பவுனு. அவ வாய்க்காச் செவ போயிருக்கா. காலை இழுத்து இழுத்து நடந்திருக்கா. அதப் பாத்துப்பிட்டு நம்ம சுப்பே இல்லெ சுப்பே. அவன் சம்சாரம் 'என்னாம்கா இழுத்து இழுத்து நடக்குறே'ன்னு கேட்டிருக்கா. அதுக்கு இவ 'அது பெரிய கதை'ன்னுருக்கா. அவளும் விடலெ. பெரிய வாயாடியாச்சே. 'எங்கிட்ட சொல்லப் படாதா. இத நாங்க யாருட்ட சொல்லப் போறோ'முண்டிருக்கா. அவளும் இவ கிட்ட சொல்லிப்பிட்டு வெளியிலே சொல்லிப்பிடாதேண்டிருக்கா. வெசளாக் கெழமை கிங்காங்கும் அவன் சம்சாரமும் சினிமாவுக்குப் போயிருக்காக. ஏதோ எம்.ஜி.ஆரு. படமாமுல்லெ...''

''ஆமா சொல்லு.''

''அதப் பாத்துப்பிட்டு வந்திருக்குக. அவனுக்கு.எம்.ஜி.ஆருண்டா உசுராம். ஏந் தெய்வம் ஏஞ்சாமிண்டு திரிவாளாம். அன்னைக்கு ராவுலெ அவ கிங்காங்குப் பயகிட்ட சொல்லியிருக்கா. 'எம்.ஜி.ஆரெல்லாம் அவர் சம்சாரம் சரோஜாதேவிட்ட எப்படி பிரியமா இருக்கார். அப்படியே அச்சுகுண்டா தூக்கியாந்து கட்டுலு மேலே போட்டு, இவரும் பொத்துண்டு மேலெ விழுவுறாரு. நீ ஒரு நா அப்படிப் பண்ணியிருப்பியாண்டுருக்கா. அவனுக்கு வெலம் வந்திடுச்சாம். ஒண்ணும் பேசலையாம். மவளே ஒன் மனசுலெ அப்படியாடி இருக்குண்டு, அவளை அச்சுக் குண்டாக்க தூக்கி, அவ வீட்டுலெ இருந்த கயித்து கட்டுலு மேலே டொப்புனு போட்டிருக்கான். கட்டுலு காலு ஒடிஞ்சு, பொதுக்கடீர்னு தரையிலெ விழுந்திருக்கா. அம்புட்டுத்தேன் அவ கிண்ணி கீழே எறங்கிடுச்சாம்.''

இதைக் கேட்டதும் அவன் விழுந்து விழுந்து சிரித்தான். சிரித்தவாக்கிலே இன்னொருவன் காதைத் தேடி ஓடினான். இது கோவிந்து காதிலும் விழுந்தது. மனசுக்குள்ளே சிரித்துக் கொண்டான். நாகு இதைக் கவனித்தானா இல்லையா தெரியவில்லை. அவன் வேலைக்கு ஏதாவது விளம்பரம் வருகிறதா என்று தேடிக் கொண்டிருந்தான்.

> **எம்.ஜி.ஆரெல்லாம் அவர் சம்சாரம் சரோஜாதேவிட்ட எப்படி பிரியமா இருக்கார். நீ ஒரு நா அப்படிப் பண்ணியிருப்பியாண்டுருக்கா.**

நாகு ஊரை விட்டுப் போய்விட்டால் கோவிந்துக்குத்தான் சிரமம். நட்பு என்று நிறைய உண்டு. மனம் விட்டுப் பேச, மனத்தைப் பகிர்ந்து கொள்ள தோதான இன்னொரு மனசு வேண்டும். இல்லாவிட்டால் இதோ இப்படிச் சிரிப்பாய் சிரித்து விடும்படித்தான் இருக்கும்.

உரத்த குரலோடு புழுதியெழும்ப அந்த மதுரை பி.ஆர்.சி. பஸ் வந்து நின்றது. வழக்கமாக பஸ் நிற்கும் இடத்தைவிட்டு, சற்றுத் தள்ளி முன்னே நின்றது. எல்லோரு

டைய விழிகளும் ஆச்சரியத்தில் அகண்டன. சிலையம்பட்டியில் பி.ஆர்.சி. மதுரை வண்டி நிக்கவே நிக்காது. திண்டுக்கல், தேனி, கம்பம் பஸ்தான் நிற்கும். கோவிந்து வும் சட்டென்று திரும்பினான். பஸ்ஸில் இருந்து மாமா இறங்கினார். கூடவே அக்காவும். கோவிந்து சட்டென்று எழுந்து ஓடினான். அவர்கள் இறங்கவும் பஸ் கிளம் பிற்று. கோவிந்து கூடவே நாகுவும் சென் றான்.

''வாக்கா... மாமா... வாங்க...''

''ம்.''

ஆளுக்கு ஒரு பையை வாங்கிக் கொண் டனர்.

''நாகு என்னா செய்யுறே?''

''சும்மாதேன்கா.''

''இந்தா பாரு மாமாடீ!''

''ஏய்! குட்டி.''

''தூக்கம்! இன்னேரம் வரை மாமா மாமானுட்டு வந்துச்சு. தூங்கிடுச்சு.''

அக்கா மாலதியைத் தோளில் போட் டிருந்தது.

நடைவாசலில் உட்கார்ந்து எதையோ புடைத்துக் கொண்டிருந்த அம்மா விருட் டென்று எழும்பினாள். புடைத்துக் கொண் டிருந்த 'கருக்கா' நெல்லை ஒரு ஓரமாக ஒதுக்கினாள்.

''வாங்க தம்பி.''

''வாரே அத்தே.''

''அடீயே செல்லக்குட்டி! ஆச்சிட்ட வாடியம்மா.''

''தூங்குறா.''

''அந்தக் கட்டுல்லெ போடு.''

பொழுது சாயவும் எல்லாம் பட்டக சாலையில் கூடினர். அப்பா வழக்கம் போல் நடைவாசலை ஒட்டிய நிலைப்படி யில் முதுகைச் சாய்த்து உட்கார்ந்திருந்தார். அம்மா சற்றுத் தள்ளி உள் அறையின் கதவுக்குப் பின்னாடி இருந்தாள். அக்கா வும் மாமாவும் பட்டக சாலையில். கல்யா ணத்துக்குப் பிற்பாடுதான் அக்கா அப்பா வின் எதிரில் தைரியமாக உட்காருகிறது. கோவிந்து நெல்லு மூட்டை அடுக்கி வைக் கப்பட்டிருக்கும் பக்கம் உட்கார்ந்து கொண்டான். ஜெயபால் வழக்கம் போல் கட்டில் காலை உரசிக் கொண்டு நின்றிருந் தான்.

''பாக்க நல்ல குடும்பமாத்தேன் இருக்கும்மா'' என்றது அக்கா.

''மருதயாக்கும்.''

''மருதக்கு முன்னாடியே கோச்சடை!''

''படிச்சிருக்கா?''

''ம். பெரிய பத்து பாஸாம்.''

''ரொம்ப நல்லது'' என்றார் அப்பா.

''மாப்ளெ கேட்டுக்குங்க. உங்க மனசுலெ என்னான்னு சொன்னாத் தானே?'' என்றார் மாமா. ஜெயபால் பதில் பேசவில்லை. கிராப்பை ஒதுக்கிவிட்டுக் கொண்டு சிரித்தான். அவன் எப்போதும் அப்படித்தான். அதிகம் பேச மாட்டான். அவன் காரியங்கள் எல்லாம் பேசும்படிக்கு இருக்கும். கன்னத்தில் குழிவிழச் சிரிப் பான். வட்டமுகம். கருகருவென்று கிராப்பு. எடுப்பான நிறம்.

“டாக்டர் ஒரு சந்தேகம்...”

“ஒண்ணிலிருந்து ஏழு வரை எனக்கு ராசியில்லாத நம்பரு. அதனால எட்டு சந்தேகமா கேளுங்க!”

- பி.ஜி.பி.இசக்கி, நெல்லை



# பார்பிக்கு வயது 50

'ஐ'ம் எ பார்பி கர்ள் இன் மை பார்பி வேர்ல்ட்' - பாப் உலகில் பிரபலமான இந்தப் பாடலைப் போல குழந்தைகள் உலகில் பிரபலமான பார்பி பொம்மைக்கு இப்போது வயது 50. மார்ச் 1959-ல் நியூயார்க் பொம்மை சந்தைக்கு வந்த பார்பி இன்று வரை குழந்தைகளின் செல்லம். இதுவரை 1000 அவதாரங்களும் 110 பாத்திரங்களும் ஏற்றுள்ள பார்பி ஒரு நொடிக்கு மூன்று என விற்பனையாகிறது. இந்தப் பொம்மை உருவான வரலாறு பற்றிய The Barbie Book என்ற நூலும் இப்போது விற்பனையில். அட! ஜஸ்ட் 500 டாலர்தான். பார்பிக்கு எதிர்ப்பும் உண்டு. அந்தப் பொம்மை போலவே மெலிந்த தோற்றம் பெற, சில குழந்தைகள் சாப்பிட மறுக்கின்றனர் என்பது தாய்மார்களின் கம்ப்ளெய்ண்ட்.

– காஞ்சன்



வயல் வேலைகள் போக மீதி நேரமெல்லாம் தினுசு தினுசாக உடுத்துவான். உடம்பையும் 'சிக்'கென்று வைத்திருப்பான்.

''நீ பொண்ணைப் பாத்தியா?''

''போன வெள்ளிக்குப் போனோம். மருதயிலெ ஒரு விசேஷம். இவரு தங்கச்சி நாத்துனா ஒக்காந்துட்டானு சொல்லிட்டாங்க. அப்படியே போகலாமுனு போச்சு. பழமும் பூவும் மட்டும் வாங்கிட்டுப் போனோம்.''

''நல்லா இருக்காமா?'' என்றார் அப்பா.

''திடீர்னுலெ போனோம். சீவலெ. சிங்காரிக்கலெ. சாதாரண சேலெதேன். பாக்க நல்லா இருந்துச்சு. கலகலப்பா பேசிச்சு.''

''நமக்கு ஒத்துவருமா?'' என்றான் ஜெயபால்.

''ஏன் ஒத்துவராது?''

''பெரிய பத்து படிச்சுருக்குங்குறே...''

''இங்குட்டு மாதிரி இல்லெண்ணே. இங்குட்டுதேன் எட்டு பாஸானவுடனே மெட்டுப் பண்ணிக்கிட்டுத் திரியுறதெல்லாம். அவுங்க வூட்டுலெயும் நம்மளெ மாதிரித்தேன் வெவசாயமாம். சொந்த ஊர் சோழவந்தானாம். எல்லாம் குத்தகைக்கு விட்டுப்பிட்டு கோச்சடையிலெ இருக்காங்க. அவுங்க அப்பா கரும்பு இன்ஸ்பெக்டராம். அவரும் பாக்க நல்ல மாதிரியாத்தேன் தெரியுறாரு. நீங்களும் வந்து பாருங்க.''

''நீங்க பாத்தாச் சரி'' என்றார் அப்பா.

''அண்ணன் பாக்க வேண்டாமா?''

''நீயும், அவரும் கூட்டிட்டுப் போயி காட்டுங்க...''

''நீங்களும் வந்து பாக்கணும். அவுங்க என்னா நெனப்பாங்க?''

''சாதகக் குறிப்பு வாங்கியாந்தியாம்மா?''

''இருக்குப்பா'' என்று எழுந்து ஓடியது.

''காலம்பற வள்ளுவன வரச் சொல்லி பாத்துடலாம்.''

''ஆமா. அந்தாளு சரியில்லெ. சின்னமனூர் பஞ்சாங்க ஐயர்கிட்டக் காட்டுங்க.''

''சரி பாக்கலாம்.''

இரவு முழுவதும் கோவிந்துவுக்குத் தூக்கமில்லை. சந்தோஷம். சந்தோஷம்,

"வீட்டுக் கதவைக் கள்ளச் சாவியால் திறந்து பீரோவில் இருந்த துட்டையும், கோணிப் பையில் இருந்த பப்பாளிப் பழத்தையும், கொய்யா, சப்போட்டா பழங்களையும் திருடிய சுமார் இருபது வயதுடைய கில்லாடி, ஆட்டோ ரிக்ஷாவில் தப்பி ஓடியபோது தகவலறிந்த போலீஸ், விரட்டி துப்பாக்கியால் சுட்டதில் தோட்டாக்கள் அவனைத் தீர்த்தன"

- இச்சொற்றொடரில் தமிழ்ச் சொற்கள் எத்தனை? பிறமொழிச் சொற்கள் எத்தனை என்று கேட்கிறார் கவிஞர் காசி ஆனந்தன்.

விடை 58-ஆம் பக்கம்

காசி ஆனந்தன்



# தமிழனா தமிங்கிலனா?

மனசை முட்டினாலும் துக்கம் நெஞ்சில் குத்தினாலும் தூக்கம் பிடிக்காது. இன்று ஒரே சந்தோஷ மிதப்பு. இந்த ஜெயபால் அண்ணனைப் பற்றியேதான் மனசு குறி போட்டுக் கொண்டிருந்தது. ஜெயபால் தனக்கு அண்ணனா? அண்ணன் மாதிரியா இருக்கிறான்? நானும் தம்பி மாதிரியா நடந்துக்கிறேன்? ஒருநாளாவது தோளில் கை போட்டுக் கொண்டு சுற்றியிருப்போமா? இல்லெ முட்டிக் கொண்டாவது நின்றிருப்போமா? இரண்டும் இல்லை. ஆனால், நெஞ்சுக்குள் நிறைய இருக்கிறது.

வெளியில் சொல்லாமல், வெளிப்படுத்தாமல், மனசுக்குள்ளே கொண்டாடிக் கொண்டு எவ்வளவோ இருக்கிறது. 'தம்பி இம்புட்டுப் படிச்சுப்பிட்டு வேலை வெட்டினு போகாமக் கெடக்கானே' என்று அண்ணனுக்குக் கவலை. இதை எத்தனை பேரிடம் சொல்லியிருக்கும். தன்னைப் பத்தி உசத்தியாய் பேசிப் பேசி எத்தனை தடவை மயங்கியிருக்கும். ஒன்றாவது தன் காதில் விழுந்ததா? கோவிந்தும் அதைக் கேட்க வேண்டும், கேட்க வேண்டும் என்று ஆவலாய் இருந்தான். அண்ணன் வாய் மூலம் அதைக் கேட்க முடியவில்லை. ஆனால் பல வாய்கள் அதைப் பற்றி ஓயாமல் சொல்லியிருக்கின்றன.

ஜெயபால் அண்ணன் பார்க்க வாட்ட சாட்டமாக, சினிமாக்களில் வருகின்ற போலீஸ் இன்ஸ்பெக்டர் மாதிரி எடுப்பாக இருக்கும். கோவிந்து கல்லூரியை விட்டு நடமாடும் போது, 'யாரு சேவாலு தம்பியா?' என்றுதான் கேட்பார்கள். எங்கு போனாலும் 'சேவாலு தம்பிங்களா?' என்றுதான் கேள்வி வரும்.

அண்ணனை இத்தனை பேருக்குத் தெரியுமா? இத்தனை பேரை எப்படிச் சம்பாதித்தது? இத்தனையையும் உண்டுபண்ண அதற்கு ஏது நேரம்? கோவிந்துவுக்கு மலைப்பாக இருக்கும். அண்ணன் உடம்பை வசப்படுத்துவதிலும் கெட்டிக்காரன். உடம்பு மீது பிரியம் கொண்டது. தண்டால் எடுக்கும். கரலாக் கட்டை சுற்றும். சுற்றுப்பட்டிகளில் நடக்கும் 'கபடி' போட்டிகளுக்குப் போகும். தைப் பொங்கல், தீபாவளி என்றால் ஒலிப்பெருக்கி, 'கபடி பிளேயர் சேவாலு அண்ணன் எங்கிருந்தாலும் மைதானத்துக்கு வரும்படி' திசையெங்கும் அலறும். இதெல்லாம் கோவிந்துவுக்குப் பெருமைதான். அக்கா அந்தப் பெண்ணைப் பற்றிச் சொன்னது, கோவிந்துவுக்கு நெஞ்சுக்குள்ளே இருந்தது. அதை நினைத்து நினைத்துத் திளைத்தான். **(காற்று வீசும்)**










# ஆஸ்கரை மறுத்த மார்லன் பிராண்டோ!

**கந்தர்வன், முத்துக்கள் பத்து**

அநாயாசமான சொல் பிரயோகங்களால், வாசிப்பவனுக்குள் தாக்கத்தை ஏற்படுத்துவது கந்தர்வனுக்கே உரித்தான சாகசம். அறுபதுக்கும் மேற்பட்ட அவருடைய சிறுகதைகளில் இருந்து பத்து சிறுகதைகளைத் தேர்வு செய்து, நூலாகத் தொகுத்திருக்கிறார் திலகவதி. புதிதாகப் படிப்பவர்களுக்கு கந்தர்வனைப் பற்றிய நல்ல அறிமுகம் இது.

**வெளியீடு: அம்ருதா பதிப்பகம், எண்.5, ஐந்தாவது தெரு, எஸ்.எஸ். அவென்யூ, சக்தி நகர், போரூர், சென்னை - 600 116. போன்: 22522277. விலை ரூ.50/-**

**வித்தகன் பதில்கள்**

கேள்விகளை எதிர்கொண்டு, அதற்குச் சரியான பதிலளிப்பது பெரியகலை. அதுவும் அறிவியல் சார்ந்த விஷயங்கள் என்றால், மிகுந்த தேடலும் நிறைந்த வாசிப்பும் மிக அவசியம். 'பாம்புகளை மயக்க மருந்து மூலம் மயங்கச் செய்ய முடியுமா?'

இப்படி சாதாரணக் கேள்விகளில் இருந்து அசாதாரணக் கேள்விகள் வரை அநாயாசமாகப் பதிலளித்திருக்கிறார் வித்தகன். மாணவர்களுக்கு மட்டுமல்ல; அனைவருக்கும் பல னளிக்கக் கூடிய பொது அறிவுப் புதையல்!

**வெளியீடு: அட்சரா பதிப்பகம், எண்.5, ஐந்தாவது தெரு, எஸ்.எஸ். அவென்யூ, சக்தி நகர், போரூர், சென்னை - 600 116. போன்: 22522277. விலை ரூ.70/-**

**படித்ததும் கிழித்ததும்**

அன்றாட நிகழ்வுகள் முதல் அரசியல் வரைக்கும் பிரித்து மேய்கிறது பாமரனின் பேனா. 'ஷொட்டு'களும் 'கொட்டு'களுமாக பக்கமெங்கும் சிதறியிருக்கின்றன. அதோடு 'ஆஸ்கர் விருதையே புறக்கணித்தார் மார்லன் பிராண்டோ!' என்று சொல்லி, காரணத்தையும் கூறி, திகைக்க வைக்கிறார். படித்துக் கிழித்ததைப் படிக்கும் போது, ஏனோ பதைத்துப் போகிறது மனம்!

**வெளியீடு: அட்சரா பதிப்பகம், எண்.5, ஐந்தாவது தெரு, எஸ்.எஸ். அவென்யூ, சக்தி நகர், போரூர், சென்னை - 600 116. போன்:22522277. விலை ரூ.100/-**

**- ராகவன்**



''நான் கேட்ட, இந்தக் கேள்விக்கு 'பதிலா' நீங்க எதை சொல்லப் போறீங்க?''

''இந்தக் கேள்விக்குப் பதிலா, வேற கேள்வி கேளுங்கன்னு சொல்லப் போறேன்!''

- வெ.சீதாராமன்,
சென்னை-5







''ஷேக்ஸ்பியர் படிச்சிருக்கீங்களா?''

''யார் எழுதினது?''

- ஜி. லட்சுமிபதி,
சென்னை-88



''ஏங்க, நம்ம மகள் கல்யாணத்துக்குத்தான் இவ்வளவு 'மொய்' வந்திருக்கே! அப்புறம் ஏன் சோகமா இருக்கீங்க?''

''இவ்வளவையும் நான் திரும்ப மொய்யா வைக்கணுமே. அந்தக் கவலைதான்!''

- சம்பத்குமாரி

"ரெண்டும் கெட்டான் நிலைன்னா என்ன? கட்சி அகராதியைப் பார்த்துச் சொல் லுய்யா..."

"என்ன தலைவரே இது, இப்ப நாம 'மூணாவது' அணில சேர அலையலையா அதுவேதான்!"

- வெ.சீதாராமன்,
சென்னை-5.

# ரெண்டுங் கெட்டான் அணி!



Dr. ராமன்

"பசி எடுக்க ஏதோ 'தெரபி' வெச்சிருக்காராம் அந்த டாக்டர்..."

"'பசியோதெரபி'ன்னு சொல்லுங்க...!"

- சீர்காழி வி. ரேவதி,
தஞ்சாவூர்.

# கிராமத்தைத் திருப்பி அனுப்புங்கள்!

அமைதி தேடி கிராமத்துக்கு
வந்திருக்கும் கனவான்களே வந்தனம்.
கலைத்துவிடாதீர்கள்
கிராமத்து அமைதியை.

பட்டணத்து இரைச்சலில்
புண்ணாகிவிட்ட
உங்கள் காதுகளுக்கு
பறவைகளின் கூவல்
நல்ல மருந்துதான்
இல்லையென்று சொல்லவில்லை.
ஆனால் உங்கள்
பாசாங்கு வார்த்தைகளால்
பறவைகளை மயக்கி
அழைத்துக் கொண்டு
போய்விடாதீர்கள்
பட்டணத்து மேடைகளுக்கு.

கிராமத்தில் எல்லாம்
நிர்வாணமாய்த்தான் இருக்கும்
பார்த்து ரசிப்பதோடு

# 9



நிறுத்திக் கொள்ளுங்கள்
ஆடை மாட்டி
அழகுபார்த்துவிடாதீர்கள்.

நீங்கள் எல்லாம் கிராமங்களை நோக்கி
நகர ஆரம்பித்து விட்டீர்களாமே -
சொன்னார்கள்.

அதற்கு முன்னால் -
நகரத்துக்கு வந்துவிட்ட கிராமத்தைத்
திருப்பி அனுப்பியாக வேண்டும்
நீங்கள்.

அப்போதுதான் இங்கே
உங்களை வரவேற்க
கிராமம் இருக்கும்.

**தஞ்சாவூர்க்கவிராயர்**



# அமெரிக்காவுக்குக் கொடுத்த நன்கொடை!



பாராளுமன்றத் தேர்தல் நெருங்கும் வேளையில் ஏற்கெனவே மாயாவதி மீதான சொத்துக் குவிப்பு வழக்கு ஒருபுறமிருக்க, சமாஜ்வாதி கட்சியின் அமர்சிங் மீது ஒரு புகார் பரபரப்பை ஏற்படுத்தி இருக்கிறது. அமர்சிங்

# தூண்டிலில்

சினிமா பிரபலங்கள் அரசியல் கட்சியில் சேருகிற சீசன் இது. இந்தி மற்றும் போஜ்பூரி திரையுலகில் பிரபலமான ஹீரோ ரவி கிஷனுக்கு உ.பி. மற்றும் பீகாரில் ஏராளமான ரசிகர் மன்றங்கள் இருப்பதால் பி.எஸ்.பி., பி.ஜே.பி., காங்கிரஸ் ஆகிய கட்சிகள் தூண்டில் போட்டன. கடைசியில் காங்கிரஸ் போட்ட தூண்டிலில் சிக்கிவிட்டது மீன். காங்கிரசின் பிரசார ஸ்டாராக இருக்கப்போகும் அவருக்கு அனேகமாக உ.பி.யில் ஜுன்பூர்



# ராகுலுக்கு செக்!

உத்திரப்பிரதேசத்தைப் பொறுத்தவரை பா.ஜ.க. அஜித் சிங்கின் லோக்தள் கட்சியுடன் கூட்டணி பேச்சு வார்த்தை முடிந்து, மொத்தமுள்ள எண்பது தொகுதிகளில் பா.ஜ.க. 73 இடங்களிலும், லோக்தள் 7 இடங்களிலும் போட்டியிடுவது என அண்மையில் அத்வானி வீட்டில் நடந்த அத்வானி -அஜித்சிங் சந்திப்பில் முடிவெடுக்கப்பட்டுள்ளது. தனிப்

மக்கள் மனசு எப்படி இருக்கிறது என்று பல்ஸ் பிடித்துப் பார்க்கும் ஒரு சர்வேயை காங்கிரஸ் கட்சி அண்மையில் உ.பி.யின் முஸ்லிம் வாக்காளர்கள் அதிகம் உள்ள இருபது தொகுதிகளில் ரகசியமாக நடத்தியது. அதில் இப்போதைய சூழ்நிலையில் முஸ்லிம் வாக்குகளை பகுஜன் சமாஜ் கட்சி சரிபாதியாகப் பிரிப்பதற்கு கணிசமான வாய்ப்புகள் உள்ளன என்று தெரியவந்துள்ளது. எனவே, முன்னாள் பா.ஜ.க. முதலமைச்சர் கல்யாண் சிங் சமாஜ்வாதி கட்சியில் சேர்ந்துள்ள சூழ்நிலையில் அக்கட்சியுடன் கூட்டணி வைத்துக்கொண்டால், பெரும்பான்மை முஸ்லிம் வாக்குகள்

அமெரிக்காவில் இருக்கும் கிளிண்டன் ஃபவுண்டேஷனுக்கு சுமார் 45 கோடி ரூபாய் நன்கொடை அளித்திருக்கிறார். அவர் அமெரிக்காவில் உள்ள அமைப்புக்கு நன்கொடை அளித்ததன் பின்னணி என்ன என்கிற கேள்வி ஒரு பக்கம் என்றால், அவர் இவ்வளவு பெரும் தொகையை நன்கொடையாக அளித்ததை தன் வருமான வரி படிவத்திலும் குறிப்பிடவில்லை. தேர்தல் கமிஷனுக்கு அளித்த சொத்து விவரத்திலும் குறிப்பிடவில்லை. இதுகுறித்து பொதுநல வழக்கு போட்டிருக்கிறார் விஸ்வனாத் சதுர்வேதி என்பவர்.

***(தனக்கு மிஞ்சித்தான் தானம்! தானமே இவ்ளோன்னா... யம்மாடி!)***

# சிக்கும் ஸ்டார்ஸ்!



தொகுதி ஒதுக்கப்படலாம் என்கிறது கை கட்சி வட்டாரம்.

***(திருமங்கலத்துல பார்த்தீங்கல்ல! சினிமா பாப்புலாரிடி பருப்பு வேகாது! துட்டு மாமு துட்டு)***

பட்ட முறையில் பா.ஜ.க. தலைவர் ராஜ்நாத் சிங்குக்கு இதில் மகிழ்ச்சி. காரணம், ராஜ்நாத் சிங் போட்டியிடவிருக்கும் கசியாபாத் தொகுதியில் லோக்தள் கட்சிக்கு கணிசமான செல்வாக்கு உள்ளது. தேர்தலையொட்டி பா.ஜ.க. செய்துள்ள இன்னொரு காரியம், ராகுல் காந்திக்கு மிகவும் நெருக்கமாக இருந்து, அமேதி மற்றும் ரேபரேலி தொகுதிகளை நேரு குடும்பத்துக்காக கவனித்து வந்த எம்.பி.ஏ. பட்டதாரியான ரஞ்சன் குமாரை வளைத்துப் போட்டிருப்பது. வரும் தேர்தலில் ரஞ்சன் குமார் மோகன்லால்கஞ்ச் தொகுதியில் பா.ஜ.க. வேட்பாளர்.

***(கூட்டணி விஷயத்தில் நொந்துபோயிருக்கும் பா.ஜ.க.வுக்கு ஆறுதல் அளித்திருக்கிறார் அஜித்!)***



தங்களுக்குக் கிடைக்கும் என்று காங்கிரஸ் கட்சி கணக்குப் போடுகிறது.

***(தங்களோட வங்கிக் கணக்குல கோடி கோடியாக இருந்தாலும், வாக்கு வங்கிக்கு ஆலாய் பறக்கறாங் கப்பா!)***

- பரத் ராம்

# காங்கிரஸ் கணக்கு!

# தூக்கம் வராமலிருக்க

**வசதிபடைத்தோராலும் வாங்க முடியாத வஸ்து - உணவு, உடை, உறைவிடத்தை விட முக்கியமானது உறக்கம். ஆண்டியையும் அரசனையும் சம அந்தஸ்துக்கு மாற்றும் சக்தி தூக்கத்துக்கு உண்டு. அது சிலருக்கு வரமாகவும் சிலருக்கு சாபமாகவும் மாறிப்போகும் சாத்தியமும் உண்டு. தூக்கம் என்கிற அந்த ரீசார்ஜ் ரிமோட் பற்றிய சந்தேகங்கள் ஏராளம்.**



Dr. N. ராம கிருஷ்ணன்

**சென்னையில் 'நித்ரா இன்ஸ்டிட்யூட் ஆஃப் ஸ்லீப் சயன்ஸ்' வைத்து, தூக்கத்துக்கான சிகிச்சை அளிக்கும் பணியில் பதினொரு வருடங்களாக இயங்கிவரும் டாக்டர் என்.ராமகிருஷ்ணனைச் சந்தித்து தூக்கம் பற்றிய சந்தேகங்களை விழிப்போடு கேட்டபோது...**

**எப்படி படுத்துத் தூங்குவது நல்லது?**

பிறந்த குழந்தை, கர்ப்பிணிப் பெண் இவர்களுக்கு மட்டும்தான் விதிமுறை. மற்ற அனைவரும் ஒருக்களித்து, மல்லாந்து, குப்புற... அட எப்படி வேண்டுமானாலும் படுக்கலாம் - காற்றோட்டமாய்.

**பகல் தூக்கம் உடலைப் பருமனாக்குமா?**

ஒரு போதும் இல்லை. இரவில் சரியான தூக்கமில்லாதவர்கள் பகலில் கொஞ்ச நேரம் தூங்குவது நல்லது. ஸ்பெயின் நாட்டில் ஊழியர்கள் பகலில் அரைமணி நேரம் தூங்க அனுமதியே உண்டு.

**தூக்கம் வ்ராமல் இருப்பது; தூங்கிக் கொண்டேயிருப்பது இதில் எது வியாதி?**

இரண்டுமே வியாதிதான். தூக்கம் வராமலிருப்பவர்கள் உடனே டாக்டரை அணுகுகிறார்கள். தூங்கிக்கொண்டேயிருப்பவர்கள் அது வியாதி என்று புரிந்து கொள்வதே இல்லை. இதுதான் பிரச்னை.

**தூக்கத்தில் உளறுவது ஏன்?**

தூக்கத்தில் எப்போதாவது உளறினால் பிரச்னை இல்லை. எப்போதும் உளறினால் அது கவனிக்கப்பட வேண்டியதுதான். தூக்கத்தில் உளறுவது, நடப்பது, பேசுவது, உண்பது இவையெல்லாமே parasomnia-என்ற நோயின் அறிகுறிகள். இந்நோயைக் குணப்படுத்த முடியும்.




**தூக்கம் மனம் சார்ந்ததா; உடல் சார்ந்ததா?**

மனம் அமைதியாக இருந்தால் தூக்கம்

வரும். உடல் உழைத்து அசதியாக களைப்பாக இருந்தால் தூக்கம் வரும். இரண்டும் ஆரோக்கியத்தின் அடையாளம். தூக்கம் மனம் மற்றும் உடல் சார்ந்தது.

**ஆழ்ந்த தூக்கம் எப்போது வரும்? எவ்வளவு நேரம்?**



# மாத்திரை?

தூக்கம் ஐந்து படிநிலைகளைக் கொண்டது, மின்விசிறியின் வேகத்தைக் காட்டும் ரெகுலேட்டரைப்போல. தூங்க ஆரம்பித்து நான்காவது படிநிலையிலிருந்து துவங்குகிறது ஆழ்ந்த தூக்கம். அதாவது தூங்க ஆரம்பித்து 90 நிமிடத்துக்கு ஒருமுறை சுமார் 20 நிமிடமும், விடியற்காலைக்கு முன்பு சுமார் 45 நிமிடமும் Rem sleep (ஆழ்ந்த தூக்கம்) வரும்.

முதல் நிலை தூக்கத்தில் ஐந்து சதவிகித நபர்களும், இரண்டாவது நிலையில் 50 சதவிகிதம், மூன்று மற்றும் நான்காவது நிலையில் 20 சதவிகிதம், ஐந்தாவது நிலையில் 25 சதவிகித மக்களும் தூங்குவ தாகப் புள்ளி விவரம் சொல்கிறது.

**தேர்வு நேரத்தில் இரவில் தூக்கத்தைத் தவிர்க்க மாணவர்கள் மாத்திரை போடுவ தாக வரும் தகவல்கள் பற்றி..?**

அப்படியான மாத்திரை கள் உண்டு. ஆனால், அது தவறான அணுகுமுறை. சரி யான தூக்கம்தான் தேர்வு களைச் சரியாக எழுதும்படி, உடலுக்கும் மனத்துக்கும் புத்துணர்வு தரும். தூக்கம் தான் ஒரு மனிதனுக்கு அவசி யமான refresh மாத்திரை.

**தூக்கமின்மைக்கும் கண்ணின் கருவளையத்துக்கும் சம்பந்தம் உண்டா?**

உண்டு. கருவளையத்துக்கு மட்டுமல்ல இதயக்கோளாறு, இரத்தக் கொதிப்பு, ஞாபக சக்தி, சர்க்கரை வியாதி, பக்கவாதம்- இவற்றுக்கும் தூக்கமின்மைக்கும் நெருங் கிய தொடர்பு உண்டு.

**தூக்கத்தில் கெட்ட கனவு வரா மலிருக்க?**

சாதாரணமாக கனவு வருவது நல்லது. ஆனால், கெட்ட கனவுகளால் விழிப்பும், அதற்குப் பிறகு தூங்குவதற்குப் பயந்து தூக்கம் கெடுவதும் பிரச்னையானால்... கெட்ட கனவு வராமலிருக்க இப்போது மாத்திரைகள் வந்து விட்டன.

- அமிர்தா



கலக்க வருதுப்பா

# கல்கி

கெட் ரெடி!
கெட் ரெடி!
கெட் ரெடி!

## உங்க மாவட்டத்துல
## 'சூப்பர்' எதுங்க? 'வேஸ்ட்' எதுங்க?

- நீங்க ஜாலியா ரவுண்டடிக்கிற டூரிஸ்ட் ஸ்பாட் எதுங்கோ?
- பார்த்ததும் பரவசமா கும்பிடு போடற கோயில் எங்கெல்லாம் இருக்குங்க?
- அசத்தலா போட்டுகிட்டு அதிரடி பண்ண சேலை,ஜீன்ஸ் சுத்துவட்டாரத்துல எங்கே பெஸ்ட்டா கிடைக்கும்ங்க?
- உங்க மாவட்டத்தோட தலை போற பிரச்னை எதுங்க? எப்படித் தீர்க்கலாம்ன்னு நினைக்கறீங்க?
- மிஸ்டர் மாவட்டம் யாருங்கண்ணா? என்ன காரணமுங்க?
- கலக்கலா கதை எழுதுவீங்களா? அசத்தலா கவிதை வருமா?
- லொள்ளு பண்ற 'ஜோக்ஸ்' கைவசம் இருக்கா?

-'ஆமா'ன்னா உடனே 'கல்கி'க்குத் தட்டி விடுங்க!



# நீங்க ச்சும்மா கோடு போடுங்க... நாங்க உடனே ரோடு போடறோம்!

ஆமாம்! உங்கள் மாவட்டத்துக்கு 'கல்கி' குழு, நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்?

ஆனா சில கண்டிஷன்ஸ்...

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்பு மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).
- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- மாவட்டத்தின்...

பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ்

ஆன்மிக, வியாபார, சுற்றுலா
தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன்

சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல்

நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ்

என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசி தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

**கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி : 14.3.2009**

**கலக்க வருதுப்பா கல்கி**
**கோவை மாவட்டம்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்
☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

# மதிப்பைக் கண்டுபிடிக்கிறதுதான்

சென்னை அரசு கவின் கலைக் கல்லூரியில் துகிலியல் வடிவமைப்பு பிரிவில் [அட! டெக்ஸ்டைல் டிசைனர்னு சொல்லுங்க] இவ்வாண்டுக்கான சிறந்த மாணவராக ஈ. பூபதி தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். பூ அலங்காரம் செய்யும் குடும்பத்தைச் சேர்ந்த [இலங்கை கிரிக்கெட் வீரர் முத்தைய்யா முரளீதரன், நடிகர் சூர்யா வீட்டுத் திருமணத்துக்கு அலங்காரம் நாங்கதான்!] இவர் விஷுவல் கம்யூனிகேஷன் படிக்கத்தான் ஆசைப்பட்டாராம். மார்க் கம்மின்னு டிசைனர் படிப்புதான் கிடைச்சுதாம். ''கிடைக்காததற்கு வருத்தப்படாமல் கிடைச்சதை விரும்பப் பழகினேன். எல்லாமே மதிப்பானதுதான். எதுக்கு, எங்க, எப்போ மதிப்புன்னு தெரிஞ்சிக்கிறதுதான் படிப்புன்னு தெரிஞ்சிக்கிட்டேன். எனக்குப் பிடிச்ச டிஸைனை மக்கள் ரசனையாக மாத்தறது எவ்வளவு அதிகாரமான வேலை. இது ஐ.டி. மாதிரி கவுத்திராது. நமக்கு கிரியேட்டிவ் இருக்கிறவரை மதிப்பிருக்கும்'' என்று சொல்லிக்கொண்டே செல்லும் பூபதி ,அடிப்படையில் ஓவியர். இம்மாதிரியான இளைய கலைஞர்கள் வரவு இனிப்பு பூசிய காலம்தானே?

- அமிர்தா



* பூபதி



* பூபதியின் டிசைன்கள்...



# நடக்குமென்பார்; நடக்கும்!



**மேஷம்:** புதிய வேலை முயற்சி கைகூடும். திருமணக் காரியம் கைகூடும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். சத்ரு தொல்லை விலகும்.

**ராசியான எண்: 1, 3**
**ராசியான கலர்: மஞ்சள், சிவப்பு**
**ராசியான கல்: பவளம்**
**இஷ்ட தெய்வம் : சிவன், தட்சிணாமூர்த்தி**



**கடகம் :** இல்லற வாழ்வில் மகிழ்ச்சி ஏற்படும். ஆடை, ஆபரணப் பொருட்கள் வாங்குவீர்கள். தொழில் வழியில் நல்ல முன்னேற்றம் ஏற்படும்.

**ராசியான எண் : 1, 3, 9**
**ராசியான கலர் : மஞ்சள், சிவப்பு**
**ராசியான கல் : முத்து**
**இஷ்ட தெய்வம் : முருகன்,**



**ரிஷபம்:** உல்லாசப் பிரயாணம் வந்து சேரும். பதவி உயர்வு கிட்டும். சொத்து சுகம் வந்து சேரும்.

**ராசியான எண் : 5, 6**
**ராசியான கல் : வைரம்**
**ராசியான நிறம் : பச்சை, நீலம்**
**இஷ்ட தெய்வம் : மகாவிஷ்ணு, ஆஞ்சநேயர்.**



**சிம்மம்:** வாகனங்களில் செல்லும்போது உஷார். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். கல்வியில் அக்கறை எடுத்துப் படிக்கவும்.

**ராசியான எண் : 1, 5,**
**ராசியான கலர் : மஞ்சள், பச்சை**
**ராசியான கல் : மாணிக்கம்**
**இஷ்ட தெய்வம் : குருபகவான்**



**மிதுனம் :** கஷ்டங்கள் விலகும். மனக் குழப்பம் தீரும். வேலையில் இருந்து வந்த பிரச்னை தீரும்.

**ராசியான எண் : 5, 6**
**ராசியான கலர் : பச்சை, மஞ்சள்**
**ராசியான கல் : மரகதம்**
**இஷ்ட தெய்வம் : திருப்பதி ஏழுமலையான்**



**கன்னி :** எதிர்ப்புகள் விலகும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வியாபாரம் சூடு பிடிக்கும். கடன் சுமை தீரும்.

**ராசியான எண் : 5, 6**
**ராசியான கலர் : பச்சை, சிவப்பு**
**ராசியான கல் : மரகதம்**
**இஷ்ட தெய்வம் : பெருமாள்**

## 08.03.09 முதல் 14.03.09 வரை



**துலாம்:** மனத்தில் சந்தோஷம் மிகுந்து காணப்படும். ஆபரணப் பொருட்கள் வாங்குவீர்கள். உற்றார் உறவினர்களால் நற்பலன் ஏற்படும்.

**ராசியான எண் : 5, 6**
**ராசியான கலர் : நீலம், வெள்ளை**
**ராசியான கல் : வைரம்**
**இஷ்ட தெய்வம் : ஆஞ்சநேயர்**



**விருச்சிகம்:** மகான்களின் தரிசனம் கிட்டும். தெய்விகப் பிரார்த்தனைகள் நிறைவேறும். வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வந்து சேரும்.

**ராசியான எண் : 1, 3**
**ராசியான கலர் : நீலம், மஞ்சள்**
**ராசியான கல் : பவளம்**
**இஷ்ட தெய்வம் : குருபகவான்**



**தனுசு:** சுபகாரியம் கைகூடும். உடல் நிலை சீராகும். குடும்ப வாழ்வில் ஒற்றுமை காணப்படும்.

**ராசியான எண் : 1, 3**
**ராசியான கலர் : சிவப்பு, மஞ்சள்**
**ராசியான கல் : புஷ்பராகம்**
**இஷ்ட தெய்வம் : சிவன்**



**மகரம்:** வேலையில் டென்ஷன் இருக்கும். திருமண முயற்சி கைகூடும். தேர்வில் அதிகக் கவனம் தேவை.

**ராசியான எண் : 1, 5**
**ராசியான கலர் : நீலம், பச்சை**
**ராசியான கல் : நீலம்**
**இஷ்ட தெய்வம் : பெருமாள்**



**கும்பம்:** எதிர்ப்புகள் குறையும். மனக் குழப்பம் தீரும். கடன் தொல்லை தீரும். உடல் ஆரோக்கியம் மேம்படும்.

**ராசியான எண் : 5, 6**
**ராசியான கலர் : நீலம், மஞ்சள்**
**ராசியான கல் : நீலம்**
**இஷ்ட தெய்வம் : மகாவிஷ்ணு**



**மீனம்:** பல வழிகளில் பணம் வந்து சேரும். திருமணக் காரியம் கைகூடும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும்.

**ராசியான எண் : 3, 9**
**ராசியான கலர் : மஞ்சள், வெள்ளை**
**ராசியான கல் : புஷ்பராகம்**
**இஷ்ட தெய்வம் : பாலாஜி**

**தஞ்சை பரத்வாஜ்**

திடீரென்றுதான் அந்த எண்ணம் வந்தது. முதலில் பயமாக இருந்தாலும் யோசித்துப் பார்த்த போது, அதிலுள்ள நியாயம் புலப்பட்டது. உபயோக மற்ற பொருளை என்ன செய்வோம்? விசிறித்தானே எறிவோம்? அப்படி எடுத்துக் கொள்ள வேண்டியது தான். எந்தப் பொருளுமே இருப்பதற்கான நியா யத்தை வெளிப்படுத்த வேண்டும். பயனில்லை என்னும்போது அதன் இருப்பு அர்த்தமற்றதாகி விடுகிறது. அதை நீக்கிவிட வேண்டியதுதான்.

இந்த மூதாட்டியால் யாருக்காவது துளி பிர யோஜனமாவது உண்டா? இவரால் நான் பலனடைந் தேன் என்று ஏதாவது ஒரு ஜீவன் இதுவரை சொல்லி யிருக்கிறதா? எதற்கு இவருக்கு ஒரு வீடு? எதற்கு சொத்துக்கள்? எதற்காக, யாருக்காக இவர் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறார்? இன்னும், இன்னும் என்று எதற்காக வெறியுடன் சம்பாதித்துக் கொண்டி ருக்கிறார்? ராஸ்கோல்நிகோவ் ஒரு முடிவுக்கு வந்து சேர்ந்தான். கொன்றுவிடலாம். தவறேயில்லை.

படிப்பு கைகூடவில்லை. துரத்திவிட்டார்கள். செயிண்ட் பீட்டர்ஸ்பர்கில் உள்ள ஒரு எலிப் பொந்தில் ஜாகை. வாழ்கிறேன் என்று சொல்ல முடியாது. உயிர் ஒட்டிக் கொண்டிருக்கிறது. ஆகவே, இன்னும் சாகவில்லை. கையில் காசில்லை. வறுமை யும் பிணியும் கூடவே வெறுப்பும் வெறுமையும் வந்து சேர்கிறது. வயிறு பசித்தாலும், உடல் கணங்கி னாலும் மூளை சும்மாயிருப்பதில்லை. தன் பாட்டுக்கு யோசித்துக் கொண்டிருக்கிறது. அதன் விளைவுதான் இந்த திடீர் யோசனை.

Crime and Punishment நாவலுக்கான கதையை ஃபியோதர் தஸ்தயெவ்ஸ்கி வளர்த்தெடுத்த போது, அவர் ராஸ்கோல் நிகோவைப் போலத்தான் இருந் தார். கடித்துத் தின்னும் வறுமை. கடன் கழுத்தை நெறித்துக் கொண்டிருந்தது. விற்பதற்கோ, அடமா னம் வைப்பதற்கோ வீட்டில் எதுவும் இல்லை. நல்ல உணவு சாப்பிட்டு நாட்கள், வாரங்கள் ஆகிவிட்டிருந்தன.

தம் கதையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார் தஸ்த யெவ்ஸ்கி. 'தி ரஷ்யன் மெஸெஞ்சர்' என்னும் இலக்கிய ஏட்டில் தொடர்ந்து பன்னிரண்டு அத்தியாயங்களில் எழுதி முடித் தார். இது நடந்தது 1866ம் ஆண்டு. தொடர் முடிந்ததும், புத்தகமாகவும் வெளிவந்தது.

# குற்றமும் தண்டனையும்



அத்தோடு அந்த நாவலை மறந்து விட முடியவில்லை தஸ்த யெவ்ஸ்கியால். எடுத்து வைத் துக் கொண்டு சில அத்தியா யங்கள் சேர்த்தார். செழுமைப் படுத்தினார். ஒரு வழியாக நாவல் முழுமையடைந்தது.

ராஸ்கோல்நிகோவ் தன்

முயற்சியில் வெற்றி பெறுகிறான். அந்த மூதாட்டி கொல்லப்படுகிறார். வெளியேறும் சமயம் பார்த்து, கொல்லப்பட்டவரின் சகோதரி அறைக்குள் நுழைந்து விடுகிறார். யோசிக்கவேயில்லை ராஸ்கோல்நிகோவ். 'போடு! ஒரு கொலைக்குப் பதிலாக இரு கொலைகள். பாதகமில்லை' என்றுதான் உள்மனம் இப்போதும் சொல்லியது.




தன் அறைக்குத் திரும்பிவிடுகிறான் ராஸ்கோல்நிகோவ். அமைதி, அமைதி, அமைதி! பொறு மனமே பொறு. ஏன் இப்படி உன் கைகள் நடுங்குகின்றன? தேவையற்ற பொருட்களைத்தானே நீ நீக்கியிருக்கிறாய்? அதன் மூலம் உலகுக்கு நன்மைதானே செய்திருக்கிறாய்? நன்றாக ஆழ அகல யோசித்து எடுத்த முடிவுதானே இது? பின் ஏன் இத்தனை சங்கடம்?

புகையாக உருவங்கள் கண்முன் தோன்றி மறைகின்றன. ஏதேதோ நினைவுகள் கல் வீசப்பட்ட குட்டையாக கலங்கிக் கலங்கி அலைக்கழிக்கின்றன.

துப்பறியும் அதிகாரி ஒருவர் ராஸ்கோல்நிகோவைச் சுற்றிச்சுற்றி வருகிறார். நேரடியாக அந்தக் கொலைகளைப் பற்றி அவர் பேசுவதில்லை என்றாலும், ராஸ்கோல்நிகோவ் உள்ளுக்குள் ஒவ் வொரு விநாடியும் உடைந்து போகிறான். 'எல்லோரும் என்னைச் சந்தேகப்படுகிறார்கள். என்னைத் தண்டிக்க விரும்புகிறார்கள்' என்று நீண்டது எண்ணம். அது காய்ச்சலாகி மீண்டும் மீண்டும் அவனைப் படுக்கையில் சாய்க்கிறது.

ஒரு கதாபாத்திரத்தின் விசித்திரமான மனநிலையை இந்த அளவுக்கு நுட்பமாக ஆராய்ந்த இன்னொரு நாவல் இல்லை. அந்த வகையில், உலக இலக்கியங்கள் அனைத்திலிருந்தும் இந்நூல் தனித்து நிற்கிறது.

**மைப்புட்டியாக இருந்தாலும் சரி, மனிதனாக இருந்தாலும் சரி, பயனில்லை எனில் கொன்றுவிடலாம். தவறேயில்லை.**

சரி, கதையின் முடிவு என்ன? இறுதி வரை ஒருவரும் ராஸ்கோல்நிகோவைச் சந்தேகிக்கவில்லை. ஆனாலும், 'இனி ஒரு நொடியும் தாங்க இயலாது' என்னும் நிலையில், தன் தலையை இரு கரங்களாலும் அழுத்திப்பிடித்தபடி நரம்பு தெறிக்கக் கத்துகிறான் ராஸ்கோல்நிகோவ். ''ஆமாம், ஆமாம், ஆமாம், நான்தான் அந்தக் கொலைகளைச் செய்தேன்... போதுமா?''

# படுதலம் சுகுமாரன்



**தி**ண்ணையில் பாய் போட்டுப் படுத்து ஓய்வெடுத்துக் கொண்டிருந் தேன். பயணச் சோர்வில் இலேசான கண் அயர்வு. அம்மா குழம்பு தாளிக்கும் மணம் சமையற்கட்டைக் கடந்து வந்து சுவாசத்தில் கலந்தது. தூக்கம் கலைந்து எழுந்தேன். திண்ணையில் நான் எழுந்தது அடுப்படியிலிருக்கும் அம்மா வுக்கு எப்படித் தெரியுமோ...

''இதோ... முடிஞ்சுது ராஜு''... ஒரு நிமிஷம்தான்... வடிபோட்ட சோத்துப் பானையை நிமிர்த்திட்டுக் கூப்புடறேன்'' என்று குரல் கொடுத்தார்.

''பொறுமையா செய்மா...'' என்றேன்.

**நா**ன் வருவது அம்மாவுக்குத் தெரி யாது. திடுதிப்பென்று புறப்பட்டு வந்து விட்டேன்.

''நேத்து கூட நினைச்சுக்கிட்டிருந் தேன். எங்கே வரப் போறேன்னு ஒரு சந்தேகம். காக்கா கூட காலையிலிருந்து வீட்டு மேல உட்கார்ந்து கத்திக்கிட்டிருந் தது...''

குடிக்கத் தண்ணீர் கொடுத்தார். கடைக் குப் போய் சமையலுக்கு வேண்டியதை வாங்கி, மடியில் மறைத்துக் கொண்டு திரும்பினார். தெருவில் யாருடைய கேள்விக்கோ, ''பையன் வந்திருக்கான்பா'' என்று சப்தமாகச் சொன்னார். பிறகு அடுப்பை மூட்டினார்.

ஒரு பக்கம் என்னிடம், மனைவி, குழந் தைகள் குறித்து விசாரித்துக் கொண்டும், ஊரில் நடந்த சம்பவங்களைச் சொல்லிக் கொண்டும், இன்னொரு பக்கம் சமையல் வேலைகளைச் செய்து கொண்டும் நிமிஷங் களை விரட்டினார். அம்மாவின் பேச்சுகூட தாலாட்டு மாதிரி இருக்கவே, தூங்கிப் போனேன். சமையல் வாசனை எழுப்பி விட்டது.

**நா**ன் தயாளன். பி.காம்., படித்து திருவள்ளூரில், வங்கிப் பணி. என் சிறு வயதில் அப்பா தவறிவிட்டார். அம்மா தான் வாயைக் கட்டி, வயித்தைக் கட்டிப் படிக்க வைத்தது.

வேலை, கல்யாணம்... என்று குழந்தை களுடன் இன்று நான் சௌக்கியமாய் இருக்க, அம்மாதான் காரணம்.

இவ்வளவும் செய்து வைத்து, கிட்டே இருந்து அனுபவிக்காமல் எட்டி நின்று அழகு பார்ப்பவர்.

அதென்னமோ, வாழ்ந்த வீட்டின் மேல் பற்று. 'இங்கே இருந்தால் உன் அப்பா



# பசியாறும் வேளை

வோடு இருக்கறாப்ல ஆறுதலா இருக்கு' என்றார். வீடுதான் அப்பாவாம்.

பாவனைகள்தான் அவரை சந்தோஷத்தில் வைத்திருக்கின்றன.

மறுப்பு சொல்லவில்லை நான். அவரைப் பார்க்க வேண்டியாவது மாசம் ஒரு முறை ஊருக்கு வந்து போவதில் மகிழ்ச்சி இருந்தது.

"**சா**ப்பிடலாம் ராஜா..." அம்மாவின் கனிவான குரல்.

யார் வீட்டுப் புழக்கடை வாழை மரத்திலிருந்தோ வாழை இலை கேட்டு வாங்கி வந்திருந்தார்.

வெண்சோறும், பருப்புக் குழம்பும், கத்திரிக்காய் பொரியலும் என, சாப்பாடு அற்புதமான ருசியோடு இருந்தது. "நீயும் சாப்பிடும்மா."

அவரும் அலுமினியவட்டில் கொஞ்சம்

சாதம் போட்டுக் கொண்டார். என்னோடு சேர்ந்து சாப்பிடுவதில் அம்மாவுக்கு ஒரு சந்தோஷம். அதற்காகவே எதிர்பார்த்துக் காத்திருப்பார்.

சாதத்தைப் பிசையும்போது, வாசலில் நிழல் படிந்து யாரோ வீடேறி வருவதைக் காட்டியது.

சற்று நேரத்தில் சிரித்த முகத்துடன் ஆறுமுகம், ''என்ன தயாளா... எப்ப வந்தே?'' என்று கேட்டபடி வந்து திண்ணை விளிம்பில் அமர்ந்தான்.

**'இங்கே இருந்தால் உன் அப்பாவோடு இருக்கிறாப்ல ஆறுதலா இருக்கு' என்றார். வீடுதான் அப்பாவாம்.**

''கொஞ்சம் முன்புதான்.''

''சவுகரியமெல்லாம் எப்படி?''

''நல்ல சவுக்கியம்... நீ?'' என்று பேசிக் கொண்டிருக்க... அம்மா இன்னொரு வாழை இலைத் துண்டைப் போட்டு, வட்டிலில் இருந்த சாதத்தை இலைக்கு மாற்றியபடி, ''வாப்பா ஆறுமுகம். கைகழுவு. ஒரு பிடி சாப்பிடு...'' என்று கூப்பிட்டார்.

''அய்யோ அத்தை... சாப்பிடத்தான் போய்க்கிட்டிருக்கேன். வீட்ல ஆக்கி வச்சதை யார் தின்றது..?'' என்று மறுத்தான்.

''தயாளனோட உட்கார்ந்து சாப்பிடுடா... போறப்ப, வர்றப்பெல்லாம் கேட்டுக்கிட்டே இருப்பே.. பழைய சிநேகிதன் வேற... வா...''

''சொன்னாலும் கேட்கமாட்டேங்கறே...'' என்றபடி வந்து அமர்ந்தான்.

எனக்கு சோற்றுப் பானை மேல் கவனம் போனது. அதே நேரம், ''கமலம்மா...'' என்று குரல் கொடுத்தபடி, விசாலம் பாட்டி வீட்டின் பின் வாசல்பக்கம் நுழைந்தார்.

''வா... சித்தி பேரன் வந்திருக்கான்னு பார்க்க வந்தியா...?'' என்று வரவேற்றார் அம்மா.

சிறிது நேர உரையாடலுக்குப் பின் நண்பன் கிளம்பிப் போனான்.

'போதும், போதும்' என்று சொல்லிச் சொல்லி சாப்பிட்டுவிட்டு பாட்டி போன பின், அம்மா பாத்திரங்களை ஒழித்துப் போட்டுவிட்டு, கை துடைத்தபடி வந்தார். நான் அவர் முகத்தைப் பார்த்தேன். மூன்று பேர் சாப்பாட்டையும் தான் ஒருத்தியே சாப்பிட்டது போல் நிறைவும், திருப்தியும் அம்மா முகத்தில். ஆச்சரியம்தான்.

மற்றவர்களுக்குப் பரிமாறி அவர்கள் சந்தோஷமாகச் சாப்பிடுவதை அழகு பார்த்தே, தன் பசியை ஆற்றிக்கொள்ளும் வல்லமை, அம்மாக்களுக்கு மட்டும் எப்படித்தான் வாய்க்கிறதோ...?

''என்ன ராஜு அப்படி பார்க்கற?'' என்று கேட்டார், அம்மா!

''சும்மாதான்'' என்றேன். ●

**38-ஆம் பக்கத்துக்கான விடை:**

**அந்தச் சொற்றொடரில்....**

சாவி - போர்த்துகீசியம்
பீரோ - பிரெஞ்சு
துட்டு - டச்சு
கோணி - இந்தி
பப்பாளி - மலாய்
சப்போட்டா - இசுப்பானியம்
கொய்யா - பிரேசிலியன்
கில்லாடி - மராத்தி
ஆட்டோ - கிரேக்கம்
தகவல் - அரபி
ரிக்ஷா - சப்பானியம்
துப்பாக்கி - துருக்கி
தோட்டா - உருது



(நன்றி: புத்தகப் பண்ணை)

தகவல் : அமிர்தா




இரண்டு தாதாக்களுக்கு நடுவே மாட்டிக்கொண்ட ஒரு கம்ப்யூட்டர் இன்ஜினீயர், சொல்லக்கூடாத ஒரு வார்த்தையைச் சொன்னதற்காக படும் அவஸ்தைதான் படத்தின் மையம். அந்தச் சூழ்நிலையிலிருந்து எப்படி மீண்டு வருகிறார் என்பது படத்தின் மீதிக் கதை. இடையில் தமிழ் சினிமாவுக்குரிய காதல் வேறு.

**ப்ளஸ்**

* இயல்பாய் நடித்திருக்கும் புதுமுகக் கதாநாயகன்...
* உதார் விடும் ரோலில் ஹீரோயின் சார்மி...
* இரண்டு பேரும் இணையும் ஸீன்களில் திரையில் தெறிக்கும் காமெடி...
* தாதாக்களின் அண்டர்வேர்ல்டு உலகத்தைப் படம்பிடித்திருக்கும் கேமரா.
* ஆபாசம் கலக்காத வசனங்கள்
* ஐட்டம் டான்ஸ் கலக்காத பாடல்கள்

**மைனஸ்**

* 'டொங்கு' விழுந்த திரைக்கதை...
* மருந்துக்குக்கூட ஈர்க்காத இசையமைப்பு...
* கடுப்பேற்றும் வில்லத்தனம்...
* படம் முடிந்தும் பத்து நிமிடங்கள் நீளும் காட்சியமைப்பு
* காதைப் பொத்திக்கொள்ளத் தோணும் பின்னணி இசை
* எப்படா படம் முடியும் என ஏங்க வைக்கும் இழுவை ரகம்...

லாடம் - ரசிகர் மனத்தில் ரத்தம்!

– தேவிஸ்ரீ




காணச் செல்வது போல) புறப்பட்டோம். முதல் இரண்டு நாள் டிஸ்னிலேண்ட். அது ஒரு கனவு சாம்ராஜ்யம். குடுகுடு கிழவர்களையும் குதூகலிக்கும் குழந்தைகளாக மாற்றும் கந்தர்வ பூமி.

அடுத்த நாள் கலைஞனின் மிகப் பெரிய கோயிலான ஹாலிவுட் சென்றோம். ஆங்கிலப் படங்களில் நாம் பார்த்து அதிசயிக்கும், மயிர்க்கூச்செறியும் காட்சிகளை எப்படியெல்லாம் எடுக்கிறார்கள்; அல்லது எடுத்து நம்மை ஏமாற்றுகிறார்கள் என்று

# கலைஞர்களின் திருப்பதி!

**'ஹாலிவுட் போறேன்... ஹாலிவுட் போறேன் எல்லோரும் பார்த்துக்குங்க நானும் ஹாலிவுட் நடிகன்தான்'னு வடிவேலு மாதிரி நானும் சொல்றேன். சொன்னா நம்புங்க ஸார்...னு தனது அனுபவத்தை நாடக சீன் மாதிரி இங்கே நடத்திக் காட்டுகிறார் நாடக நடிகர் டி.வி. வரதராஜன்.**

கலிபோர்னியாவில் எங்களது 'கலக்கற சந்துரு, பிரமாதம்' என்ற நாடகத்தை வெற்றிகரமாக நடத்திக் கொண்டிருக்கிறார் நம்ம ஊர் டீ.வி. தொகுப்பாளினி - சீரியல் நடிகை - தீபா ராமானுஜம். அவர் குழுவுடன் நடிக்க என்னை அழைத்திருந்தார்; நானும் என் மனைவி உஷாவும் நவம்பரில் கலிபோர்னியா வாசம் காணப் புறப்பட்டோம். நாடகக் காட்சிகள் வெற்றிகரமாக முடிந்தபிறகு, தீபாவுடன் டிஸ்னிலேண்ட், ஹாலிவுட் விஜயம் காண காரில் புளியோதரை, சப்பாத்தி எல்லாம் கட்டிக்கொண்டு (நம்ம ஊர் பொங்கல் சுற்றுலா கண்காட்சி

ஒவ்வொரு ஃப்ளோர் ஆக ரயிலில் அழைத்துச் சென்று காட்டுகிறார்கள்.

பின்னர் ஸ்பெஷல் எஃபெக்ட்ஸ் காட்சிகள் எப்படி எடுக்கப்படுகின்றன என்று ஒரு காட்சியை எடுத்து விளக்குகிறார்கள்; தீபாவுக்கு பலமுறை சென்று பழக்கம்; அவள் என்னிடம், 'மேடையில் ஒரு காட்சியை விளக்கி, அதைப் படமாக்கும் போது நடிக்க யாராவது வருகிறீர்களா என்று கேட்பார்கள். உடனே கையைத் தூக்கி விடுங்கள்' என்றாள். நானும் அவனைக் கவனித்துக் கொண்டேயிருந்தேன்; அவர்கள் பேசும் ஆங்கிலம் நமக்குப் புரிவதே கஷ்டம்; அவன் பேசப் பேச நான் ஒரு பக்கம், உஷா ஒரு பக்கம், தீபாவையே கவனித்துக் கொண்டிருந்தோம்; திடீரென்று தீபா 'கையைத் தூக்குங்க' என்றார்; உடனே உஷா என் கையைப் பிடித்து உயரத்




தூக்கினாள். 'யெஸ், கம் ஆன்' என்றார் அந்த அமெரிக்கர்; உடனே துள்ளிக்குதித்து மேடைக்குத் தாவினேன்; என்னைப் பற்றிய விவரங்களைக் கேட்டார்; நான் ஒரு டீ.வி. நட்சத்திரம், மேடை நடிகன்; கே.பாலசந்த ரால் நடிகனாக பட்டை தீட்டப்பட்டவன் என்றேன். என் குருநாதர் கே.பி. சார் பேரை எங்கு சொன்னாலும் எனக்கு ஒரு மரியாதைதான். அதற்கு அவரும், "ரொம்பச் சந்தோஷம். வாங்க ஒரு சீன்ல நடிங்க"ன் னார். இவ்வளவும் எனக்கு எப்படிப் புரிந்தது என்கிறீர்களா? கூட வந்திருந்த தீபா கணவர் ராமானுஜம் அந்த ஆளுக்காக என்னைப் பார்த்து தமிழில் கொடுத்த டப்பிங் வாய்ஸ்தான். என்னை மரத்தில் கட்டி வைத்து அடிக்கிறார்கள்; ஒரு பெரிய மாளிகை என் மீது விழுகிறது... சுத்தமா அவன் பேசறது புரியல; என்ன பண்ணச் சொல்றான்னு தெரியல... அடிச்சா அழ வேண்டாமா; மேலே மாளிகை விழுந்தால், அலற வேண்டாமா; ஆனால், நான் சிரிக் கிறேன்; அதுக்கு அவன் ஏதோ சொல்றான். எல்லோரும் சிரிக்கறாங்க... அப் புறம் தீபா அங்கேர்ந்து குரல் கொடுக்க, உடனே, கொஞ்சம் நஞ்சமில்ல, பயங்கரமா அந்தக் கொட்ட கையே நெசமாவே விழற மாதிரி ஓவர் ஆக்ட் பண்ணிட்டேன்; அப்புறம் என் கையை, ஒரு நான்ஸ்டிக் தவாவுக்கு குடுப் பாங்களே ஒரு மரக்கரண்டி அதை ரெண்டா கட் பண்ற மாதிரி பண் றாங்க; எனக்கு அது கிச்சு கிச்சு மூட்றமாதிரி




## இப்படித்தான் உங்கள நாங்க ஏமாத்துறோம்னு சொல்லாம சொன்னான்.

இருக்கு. சிரிக்கறேன். அவன் என்கிட்டே வந்து, 'உன் கையை ரெண்டா வெட்றோம்; ரத்தம் கொட்றது அழு' அப்பமன்னான். ஓரளவுக்கு எனக்கு அவன் இங்கிலீஷ் புரிய ஆரம்பிச்சிடுச்சு; தீபாவோட தயவு இல்லாமலேயே, கத்தறேன்; அப்புறம் எடுத்தது எல்லாம் போட்டுக் காட்டினான். மாளிகை விழ, நான் விழ, என்னை கட்டி வச்சு அடிக்க, என் கையைத் துண்டா கட்டாக்க ரத்தம் சொட்ட நான் 'ஓ!'ன்னு அழ, வாவ்... என்ன பிரமாதமா நடிச்சிருக்கேன். இப்படித் தான் உங்களை நாங்க ஏமாத்துறோம்னு சொல்லாம சொன்னான். யெஸ், வெளியில வந்தேன்; 'ஸ்லம் டாக் மில்லியனர்' டைரக்டர், அன்னைக்கு மேடையில அவார்டு வாங்கிண்டு மேலயும், கீழேயும் குதிச்சாரே, அது மாதிரி நானும் குதிச்சுண்டே சொன்னேன்: 'யெஸ்... நானும் ஹாலிவுட் நடிகர்.' பக்கத்துல பார்க்கறேன் என் மனைவி உஷாவும், என் டைரக்டர் தீபாவும் கையைக் குலுக்கிண்டு, இந்த ஆஸ்கர் அவார்டு அறிவிக்கப்பட்டவுடனே, ஒருத்தரை ஒருத்தர் கட்டிண்டு, கன்னத்துல முத்தம் குடுத்துக்குவாளே அதுமாதிரி பண்ணிண்டிருக்கா...

பட் ஒன் திங்... இந்த ஹாலிவுட், டிஸ்னிலேண்ட் இது எல்லாம், கலைஞர்களுக்கு ஒரு திருப்பதி பெருமாள் கோயில் மாதிரி; நிச்சயமா போய்த் தரிசிக்கணும். சராசரி ஆளா போய்ப் பார்க்கறதுக்கும் கலைஞனா பார்க்கறதுக்கும் ரொம்ப வித்தியாசம் உண்டு. (உங்களுக்குள் ஒரு கலைஞன் தூங்கிக்கிட்டு இருப்பான் அவனை எழுப்பி) கலைஞனா மாற கொஞ்சம் ட்ரை பண்ணுங்க! அப்புறம் ஒருமுறையாவது போய்ப் பாருங்க அந்தத் திருப்பதியை!

**- டி.வி. வரதராஜன்**



# சிதம்பரத்துக்கு எதிராக வை.கோ.?

ஜெயலலிதா ராஜகண்ணப்பனுக்கு சிவகங்கையில் போட்டியிட வாய்ப்பு கொடுப்பார் என்பது பரவலான எதிர்பார்ப்பு. அதே சமயம் முன்னாள் அமைச்சரான ஆலங்குடி வெங்கடாசலத்துக்கு வாய்ப்பு கொடுத்து, ராஜகண்ணப்பனை, தொகுதியின் தேர்தல் செலவைப் பார்த்துக் கொண்டு சிதம்பரத்தைத் தோற்கடிக்க வேண்டிய பொறுப்பையும் கொடுக்கக்கூடும் என்ற செய்தியும் உலாவருகிறது.

காரணம் வனவாசம் போன்று 13 வருடங்களுக்குப் பிறகு கட்சிக்கு வந்திருக்கும் ராஜகண்ணப்பனுக்கு, தொகுதியில் உள்ள கட்சிக்காரர்கள் முழு ஒத்துழைப்பு கொடுப்பார்களா என்ற சந்தேகம்தான். மேலும் ராஜ கண்ணப்பனுக்கு 2011ல் சட்டமன்றத்தில் வாய்ப்பு கொடுத்தால் போதும் என்ற கருத்தும் போயஸ் தோட்டத்தில் இருக்கிறதாம். இப்படிப் பேச்சுக்கள் இருந்தாலும், ஜெயலலிதா தடாலடியாக ஏதேனும் செய்வார் என்பதுதானே வாடிக்கை. இந்த நிலையில் சமத்துவ மக்கள் கட்சியின் கொள்கை பரப்புச் செயலாளரான மருது அழகுராஜ், சிவகங்கை தொகுதிக்குள் "சிதம்பரமே தொகுதிக்குள் வராதே" என்று பிரசாரம் செய்து வருகிறார். இந்தத் தொகுதிக்கு உட்பட்ட சட்டமன்றத் தொகுதிகளான திருமயம் மற்றும் திருப்பத்தூரில், தமது செல்வாக்கை சட்டமன்றத் தேர்தல்களில் நிரூபித்திருக்கும் மருது.அழகுராஜ், "ஈழத் தமிழர்களுக்கு காங்கிரஸ் செய்த துரோகம் காரணமாக சிதம்பரம் எத்தனை கோடிகளை தொகுதிக்குள் கொட்டினாலும் தோற்கடித்தே தீருவோம்" என்கிறார். ஜெயலலிதாவும் சிவகங்கை தொகுதியில் கூடுதலாக ஒன்றிரண்டு நாள் பிரசாரம் செய்ய இருக்கிறாராம். இந்தச் சூழலில் சிதம்பரத்தை எதிர்த்து வைகோ நிறுத்தப்படக்கூடும் என்ற வதந்தியும் பலமாக உலவுகிறது. சிதம்பரத்துக்கு சிவகங்கையில் பலத்த சவால் காத்திருக்கிறது.

இந்த முறை காங்கிரஸ் சார்பில் மீண்டும் பெரிய தலைகள் போட்டியிடுவதற்கு காங்கிரஸ் இரண்டாம்கட்ட பிரமுகர்கள் மத்தியில் கடும் எதிர்ப்பு இருக்கிறது. "பிரபு, சித்தன், மணிசங்கர் ஐயர், சிதம்பரம், தங்கபாலு, ஈ.வி.கே.எஸ். இளங்கோவன் என்று பெரிய தலைகளே திரும்பத் திரும்பப் போட்டியிட்டு வென்று சென்றால் எங்களுக்கெல்லாம் வாய்ப்பு எப்போது?" என்று கேட்கிறார்கள் அவர்கள். இது தொடர்பாக ராகுல் காந்திக்கு, 'இளைய காங்கிரஸ் பேரவை' என்ற அமைப்பின் சார்பில் கடிதம் அனுப்பப்பட்டிருக்கிறது. இருந்தாலும் சிதம்பரம், தங்கபாலு போன்றவர்களுக்கு சீட் உறுதி. இந்த நிலையில் தொகுதி மறுசீரமைப்பில் பழனியும், ராசிபுரமும் தூக்கப்பட்டு விட்டதால், கார்வேந்தனும், ராணியும், திக்குத் தெரியாமல் இருக்கிறார்கள். நீலகிரி தாழ்த்தப்பட்டோர் ஒதுக்கீடு ஆகிவிட்டதால், பிரபு பொள்ளாச்சிக்கோ, கோவைக்கோ அல்லாட வேண்டியிருக்கிறது.

- ஸ்ரீநி



பகவானுக்குத் தேன் அபிஷேகம் செய்துதான் சாரீர சம்பத்தை அடையக்கூடும் என்பது உண்மையானால், செம்பை பாகவதர் வெறுமனே குடத்தினால், செம்பினால் மட்டும் தேன் அபிஷேகம் செய்தவராயிருக்க முடியாது. உயரமான இடத்தில் குளம் கட்டித் தேனை நிரப்பிக் குழாய் வைத்துச் சுவாமியின் தலையில் கொட கொடவென்று ஓயாமல் கொட்டிக் கொண்டிருக்கும்படி செய்திருக்க வேண்டும்.

**சங்கீதத்துக்கும் ஹிருதயத்துக்கும் சம்பந்தமில்லை: அது செவியினாலும் அறிவினாலும் மட்டுமே அனுபவித்தற்குரியது**

''சங்கீதத்துக்கும் ஹிருதயத்துக்கும் சம்பந்தமில்லை; அது செவியினாலும் அறிவினாலும் மட்டுமே அனுபவித்தற்குரியது'' என்று வைத்துக் கொண்டோமாயின், அன்று செம்பை வைத்தியநாதய்யருடைய கச்சேரி ஒப்பற்றது என்று சொல்லலாம். நாலுமணி நேரத்தில் ஒருகணநேரமாவது செவிக்குச் சலிப்பு ஏற்படவில்லை. இதைப் போன்ற சங்கீதத்தைத்தான் "கர்ணாமிர்தம்'' என்று சொல்வது நியாயமாகும்.

ஆனால் ஹிருதய பாவம் என்று ஏதோ சொல்கிறார்களே, அந்தப் பேச்சு உள்ள ஊரிலேயே செம்பை பாகவதர் இருந்தது கிடையாது என்று தோன்றும்.

மேலும், இப்போதெல்லாம், ''தமிழ்க் கீர்த்தனைகள் பாடவேண்டும்''; ''பாடுபவர்களுக்கும் கேட்பவர்களுக்கும் புரிந்த பாஷையிலே பாடவேண்டும்'' என்றெல்லாம் ஒரு கிளர்ச்சி நடக்கிறதே, அதெல்லாம் நம்முடைய செம்பை வைத்தியநாத பாகவதரிடம் பலிக்காது. இந்தக் கூச்சல் எல்லாம் அவருடைய செவிக்கு எட்டுவதேயில்லை. எட்டினாலும், நெல்ஸன் தன்னுடைய ஒற்றைக் கண்ணையும் மூடிக் கொண்டு, ''சண்டை நிறுத்தச் சொன்ன அடையாளம் எனக்குத் தெரியவில்லை'' என்றானாமே, அதுபோல் தன் காதில் விழவில்லையென்றே பாவித்துக் கொள்வார்.

ஆனால் அப்படிப்பட்டவர்கள்கூட, தமக்கும் சபையோருக்கும் தெரிந்த பாஷையில் பாடுவதின் சிறப்பை அறிந்து கொள்ளும்படியான சம்பவம் ஒன்று அன்றைய தினம் ஏற்பட்டது.

"தில்லை ஈசனைக் காண என்ன புண்ணியம் செய்தேனோ?'' என்பது அவர் அன்று பாடிய பல்லவி. அன்றைய கச்சேரியில் அவர் பாடிய தமிழ்ப்பாட்டும் இந்த ஒரு வரிதான்!

இந்தப் பல்லவியை அவர் பாடிக் கொண்டிருக்கையில், சபையின் காரியதரிசி ஸ்ரீமான் வேங்கடாச்சாரியர் பாகவதருக்குப் பூமாலை கொண்டு வந்து போட்டார். பாகவதர் அப்போது சமயோசிதமாய் 'நான்' என்னும் ஒட்டுப் பதத்தைச் சேர்த்துக் கொண்டு, தக்க சமிக்ஞைகளுடன்,

'' 'நான்' என்ன புண்ணியம் செய்தேனோ''

என்று உச்சஸ்தாயியில் நிரவல் செய்யவே, சபை முழுவதும் ஒரு கலகலப்பும் குதூகலமும் உண்டாயிற்று. இதன்

**அன்றும் இன்றும் என்றும்**

படிப்பினையை அவர் உணர்ந்து கொண்டாரா என்பது அந்தத் தில்லை ஈசனுக்குத் தான் வெளிச்சம்!

செம்பை பாகவதரிடம் மற்றொரு விசேஷம் என்னவென்றால், சாதாரணமாய்ப் பாடகர்களிடம் நாம் காணும் கோரணிகளை அவரிடம் சிறிதும் காண முடியாது. எப்போதும் பிரஸந்நமான முகம். இடையிடையே புன்னகை செய்வார். உங்களைப் பார்த்துத்தான் அவர் முறுவல் செய்வதாய்த் தோன்றும். ஆனால் அதற்குக் காரணம் இல்லாதபடியால், உங்களுக்குப் பின்னால் உள்ளவர்களைப் பார்த்துத்தான் நகை செய்கிறாரோவென்று நீங்களும் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டேயிருப்பீர்கள்.

# கர்ணாமிர்தம்

அன்று பக்கவாத்தியம் வாசித்தவர்கள் மிருதங்கம் கோதண்டராமையரும், பிடில் பாலகிருஷ்ணையரும் ஆவர். கச்சேரி அன்று அவ்வளவு நன்றாய் அமைந்ததற்கு இவர்களும் பெரிதும் காரணம் என்பதில் சந்தேகமில்லை. மிருதங்க வித்வான்களுக்குள், கோதண்டராமையருக்கு எங்கே ஸ்தானம் அளிப்பது என்பதைப் பற்றி எனக்குச் சிறிது சந்தேகம் இருந்தது. இந்தக் கச்சேரி கேட்டபின் முழுநிச்சயம் ஏற்பட்டது. முன்னணியில், முதல் வரிசையில், முன்னாடிதான் அவருக்கு இடங்கொடுக்க வேண்டும். ஒரு தடவையாவது, ஒரு கணமாவது கடூரமான சப்தம் அவர் வாசிப்பில் ஏற்படவில்லை. ''போதுமே மிருதங்கம்'' என்று நினைப்பதற்கும் அவர் இடங்கொடுக்கவில்லை. தனி ஆவர்த்தனத்துக்கு மூன்று, நாலு தடவை பாகவதர் அவகாசம் கொடுத்தார். ஒவ்வொரு தடவையும் சரியாக எட்டாவது நிமிஷத்தில் நிறுத்திவிட்டார். (ஆம்; கடிகாரத்தை வைத்துக் கவனித்துக் கொண்டிருந்தோம்.) இன்னும் கொஞ்சம் கேட்கலாம் என்றே ஒவ்வொரு முறையும் தோன்றியது. ●



அமரர் கல்கி

# "வீட்டுக்கே வருது

**சமீபத்தில் சட்டமன்ற உறுப்பினர்களுக்கு மற்றுமொரு சலுகையாக சொந்த வாகனத்துக்கு டீசல் போட 15,000 ரூபாய் கூடுதலாகக் கொடுப்பதாக நிதி அமைச்சர் அன்பழகன் சட்டமன்றத்தில் அறிவித்தார் (ஆகமொத்தம் 20,000 ரூபாய்). அதை எதிர்த்து கண்டனக் குரல் எழுப்பி சட்டமன்றத்துக்கு வெளியேயும் கோஷமிட்டு பரபரப்பை உண்டாக்கினார் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சட்டமன்ற உறுப்பினர் பாலபாரதி. ஆச்சரியத்துடன் அணுகினோம் :**

''சட்டமன்ற உறுப்பினர்கள் தங்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக்கொள்ள அவ்வப்போது கூடுதல் சலுகைகளைப் பெற்றுக் கொள்வது என்பது அக்கிரமம். குறைந்தபட்சத் தேவைகள் அவசியம். அதற்கென்று ஆடம்பர வாழ்க்கை நடத்த ஆசைப்பட்டால் எப்படிச் சரியாகும்? காங்கிரஸ் உறுப்பினர் ஞானசேகரன், சோழிங்கநல்லூரில் எம்.எல்.ஏ. காலனி அமைத்து வீடு கொடுக்க வேண்டும் என்றார். சட்டமன்ற உறுப்பினர்களுக்குச் சலுகை வாடகையில் சென்னையில் பதவிக் காலத்தில் வீடு கொடுக்கப்பட்டிருக்கும் போது, எதற்காக தனி காலனி? இப்படி நாங்கள் எதிர்ப்பு தெரிவிக்கும்போது, எங்களைக் கிண்டல் செய்வார்கள் மற்ற கட்சிக்காரர்கள். இப்போது பதவிக் காலத்தில் மட்டும் பயன்படுத்திக் கொள்ள கார் தருகிறோம் என்றார்கள். இது அவசியம் என்றதால் நாங்கள் எதிர்ப்பு தெரிவிக்கவில்லை. ஆனால் பேராசை பிடித்த உறுப்பினர்கள், ''எங்களிடம் கார் இருக்கிறது. டீசலுக்குக் கூடுதலாகப் பணம் கொடுங்கள்' என்று வற்புறுத்தி வாங்கி விட்டனர். முதியோர் பென்ஷன் 400 ரூபாய்க்கு மேல் கொடுக்க முடியவில்லை. அதுவும் வறுமைக்கோட்டுக்குக் கீழே உள்ளவர்களுக்குத்தான். அந்த வறுமைக்கோட்டை நிர்ணயிப்பதற்குச் சரியான வழிகாட்டுதல்கள் இல்லை. கரும்பு விவசாயிகளுக்குக் கூடுதல் கொள்முதல் விலை கொடுக்க முடியவில்லை. இப்படிப் பல பிரச்னைகள் இருக்க, எம்.எல்.ஏ.க்கள் தங்கள் சம்பளத்தையும், படிகளையும் சலுகைகளையும் ஏற்றிக் கொண்டே போனால் எப்படி?'' என்று கண்கள் சிவக்க கேட்கிறார் பாலபாரதி.

**இப்போது உள்ள சலுகைகள்:**

அடிப்படைச் சம்பளம் என்னவோ 3000 ரூபாய்தான். ஆனால் தொலைபேசிப்படி, பயணப்படி, உதவியாளர் சம்பளப்படி, சட்டமன்றத்தில் கலந்து கொண்டால் அதற்கென்று தினப்படி என்று, கிட்டத்தட்ட மாதம் 30,000 ரூபாய் வருவாய் பார்த்து விடுகிறார்கள். இது தவிர கம்ப்யூட்டர், தமிழ்நாடு முழுவதும் பஸ் பாஸ், சலுகைக் கட்டணத்தில் ரயில் பயணம், எரிவாயு சிலிண்டர் ஒதுக்கீடு என்று ஏகப்பட்ட சலுகைகள் இது மட்டுமா? சென்னையில் ரூபாய் 250 வாடகையில் வீடு, தொகுதியில் அலுவலகக் கட்டடம் என்று உண்டு. இன்னும் என்ன தேவை?

உறுப்பினர்களுக்குத் தேவைக்கேற்ற படி சம்பளமும் சலுகைகளும் இருந்தால்தானே அவர்கள் வேறெங்கும் 'கைநீட்டாமல்'

# கமிஷன்!''

## பாலபாரதி விடுக்கும் எச்சரிக்கை


• பாலபாரதி

**சம்பளம் எவ்வளவு அதிகமாகக் கொடுத்தாலும் இவர்கள் மாற மாட்டார்கள். அதனால்தான் கொடுத்தது போதும். மேலும் கொடுக்காதீர்கள் என்று சொல்கிறோம்.**

இருப்பார்கள்? என்கிற வாதம் தவறானது. இப்போது கொடுக்கப்படுவதே போது மானது. மேலும் என்னதான் கொடுத்தா லும், கமிஷன் வாங்குவதும், கைநீட்டு வதும் நிற்காது. தொகுதியில் நடக்கும் ஒவ்வொரு வேலையிலும் கமிஷன். வீட்டுக்கே கொண்டு வந்து கொடுக்கிறார் கள். அதை மறுக்கும் துணிவு கம்யூனிஸ்ட் உறுப்பினர்கள் தவிர வேறு யாருக்காவது உண்டா? நான் பஸ்ஸில் போனால், 'அம்மா நீங்க இப்ப எம்.எல்.ஏ.தானா?' என்று கண்டக்டர், பாஸில் உள்ள படத்தோடு பத்து முறை என்னை ஒப்பிட்டுப் பார்க் கிறார். இப்போதைய எம்.எல்.ஏ.க்கள் பஸ்ஸில் ஏறமாட்டார்கள் என்று உறுதியாக நம்புகிறார் கண்டக்டர்! எனவே, சம்பளம் எவ்வளவு அதிகமாகக் கொடுத்தாலும் இவர் கள் மாற மாட்டார்கள். அதனால்தான் கொடுத்தது போதும் என்கிறோம். அதே சமயம், தேர்தல் செலவுகளுக்கு அரசு பணம் கொடுத்தால், தேர்தலில் பணத்தின் ஆதிக்கம் குறைந்து, பிரசாரத்தில் எளிமை யைக் கொண்டுவர முடியும்.

கம்யூனிஸ்டுகளைப் பொறுத்தவரை எங்களுக்குக் கிடைக்கும் சம்பளம், படி களை மாதா மாதம் கட்சியிடம் கொடுத்து விடுவோம். கட்சியாகப் பார்த்து எங்களைப் போன்ற முழுநேர ஊழியர்களுக்கு, மாதச் செலவுக்கு 3000 ரூபாய் பணம் கொடுத்து விடுவார்கள். அதை வைத்துச் சமாளிக்க வேண்டியதுதான்.'' (சூப்பர்!)

**- ப்ரியன்**

# குட்டியாப்பாவின் புது செல்!

**நா**ன் கூட பல நேரங்களில் என் சட்டைப் பையில் இருக்கும் போனைத் தூக்கி உரக் குண்டில் வீசிவிடலாமா என நினைத்தது உண்டு. இரண்டு காதுகளும் தினந்தோறும் மாறி மாறி உஷ்ணமாவது தான் மிச்சம். மற்றபடி ஒரு எழவும் இல்லை. இங்கிருந்து பள்ளி முக்கில் போய் நின்றால் பொஞ்சாதி போனில் கூப்பிட்டு கால் கிலோ புளி வாங்கிட்டு வாங்கோ என்கிறாள். பாலன் வாத்தியாரின் சட்டைப் பையில் கிடந்த செல் கக்கூஸில் குனியும் போது விழுந்து விட்டது. கதையைக் கேள்விப்பட்டு விசாரித்தேன்.

''எழவு மண்ணா போட்டுட்டுன்னு தண்ணிய ஊத்தி உட்டேன். அதுக்கு அவ்வளவு தாண்டே மரியாத....'' சே... என்ன துணிச்சல்? நம்மால் இப்படியெல்லாம் செய்ய இயலாமல் போய்விடுகிறது.

உப்பாவிடம் கேட்டேன்.

''ஏன் நீங்க வாங்க வேண்டியது தானே...?''

''நான் வாங்கி யார்ட்ட பேசதுக்கு... எம்.ஜி.ஆர்.கிட்டதான் பேசணும். பழைய ஒன்றியச் செயலாளர் பேசதேம்னு...''

**''நா**ம பேசதான் ஸாட்டிலைட்டை சர்க்காரு ஒருபாடு உட்ருக்கு... தரையில இல்லே... வானத்துல...''

''ஸாட்டு லைட்டோ என்ன லைட்டோ... சர்காருட்டச் சொல்லி ஒழுங்கா சாதா லைட்டப் போடச் சொல்லு... கரண்டக் காணல... அவ்வளவு பயலுவளும் இருட்டுல கெடந்து அலோ அலோன்னுங்கான்...''

உப்பாவிடம் பேசினால் நேரம் போவது தெரியாது. பேசிக்கொண்டே இருப்பார். உப்பாக்கு ஸ்பீக்கர் என்று இன்னொரு பெயரும் உண்டு.

''உப்பா என்ன ஆனாலும் சரி அடுத்த மாசம் தம்பி அரேபியாவுல இருந்து வந்த உடனே நமக்கொரு போன்...''

''எனக்கு வாண்டாம்... குட்டியாப் பாக்குக் கொடு. அவன்தான் கேட்டுட்டு கிடக்கான்.''

குட்டியாப்பா, வாப்பாவின் இளைய தம்பி. அவரின் சமீபத்திய ஆசை செல் வாங்க வேண்டும்.

எப்படியாவது ஒரு செல் ஏற்பாடு பண்ணி பொண்டாட்டி முன்னால் 'ஹலோ' என நடந்து நடந்து பேச வேண்டும் என்ற வைராக்கியம் குடியேறி விட்டது.

மறுமாசம் , தம்பி செல் கொண்டு வந்தான். வாப்பாதான் குட்டியாப்பாவைக் கூப்பிட்டுக் கொடுத்தது. பேசறப்பே அந்த முகத்தில் அப்படியொரு பிரகாசம். அவர் செல்லை மடியில் கட்டிக்கொண்டு தாடியைத் தடவியபடி நடந்து போனார். திண்ணையிலிருந்த உப்பா மெல்லச் சொன்னார். ''இப்லீஸ (சாத்தான்) மடியில கெட்டிட்டு போறபோக்கப் பாரு...'' நான் சிரித்தேன்.

**கு**ட்டியாப்பா காலையிலே சந்தை ரோட்டிலுள்ள கடைக்குப் போய் நாலைந்து முறை நடையாய் நடந்து ஒரு செட்



• மீரான் மைதீன் •

டப்புக்குள் கொண்டு வந்துவிட்டார். 'கண் மணியே பேசு' பாடல்தான் குட்டியாப் பாவின் ரிங்டோன். வீட்டுக்கு வந்த குட்டி யாப்பா... வீவி பாத்துமாவிடம் சொன் னார்...

''எனக்கொரு ஒபகாரம் செய்யணும்...''

''என்னா?''

''வீட்டு போன்ல இருந்து இந்த போனுக்குக் கூப்பிடு... நான் வளவுல நிக்கேன்.''

''ம்...'' என வீவி பாத்துமா நம்பரை அடித்தாள். அவள் நம்பரை அடிக்க ஆரம் பித்த உடனே வளவுக்குப் போய் விட்டார். கண்மணியே பேசு பாடல் ஒலித்தது.

''ஹலோ... அஸ்ஸலாமு அலைக் கும்...''

''அலைக்கும் அஸ்ஸலாம்...'' என்றாள்.

''என்னா... சொகமா இருக்கியா?'' எனக் கேட்டார்.

''இல்லன்னா.. ஆர்லிக்ஸ் வாண்டித் தருவியரா... வையும் ஒய்... போன.... லவ்வா பண்ணியலு...'' என்றபடி போனை வைத்துவிட்டாள். வளவிலிருந்து சிரித்த படியே வந்தவர்,

''படிச்சவனுக்க வேலையப் பாத்தியா... ஒரு வயரும் இல்லே... கம்பியும் இல்லே... ம்...''

அவள் போனை வாங்கிக் கொஞ்ச நேரம் உருட்டி உருட்டிப் பார்த்தாள். பிறகு ''மொவன்ட்டச் சொல்லி எனக்கும் ஒண்ணு வாண்டனும்'' என்றாள்.

ராத்திரி முழுவதும் ஒவ்வொரு பட்டனாகத் தட்டிக் கொண்டிருந்தார். எப்போது தூங்கினார் என்பது தெரியவில்லை. காலையில் செல்லில் ஆவியும் இல்லை அனக்கமும் இல்லை. அந்த மேனிக்கே மச்சான் மலுக்கிடம் போனார்.

''விரல வச்சி சும்மா நோண்டாத... போன் வந்தா இந்தப் பச்சைய அமுக்கு... பேசி முடிச்சா... இந்தச் செவப்ப அமுக்கு...''

குட்டியாப்பாவின் நம்பர் பிரபல்யமானது. ஒருத்தன் பாக்கி இல்லாமல் எல்லாரின் மனதிலும் அவர் நம்பர் மனப்பாடம். இந்த மூன்று மாதத்தில் முயல் பாய்ச்சலில் அவரின் நம்பர் ஊர் முச்சூடும் ஓடியது.

**ம**ரித்துக் கிடந்த பெத்தும்மாவை கபிர் அடக்கம் செய்ய குழி வெட்டச் சென்றவர்களைப் பார்க்கப் போன போது தாஸ் இந்த நம்பரைத் தந்து, ''இதுல ஒரு போனைப் போட்டு ஒரு லட்சம் ரெடியா இருக்குன்னு சொல்லுங்கோ... '' என்றான்.

என்னமோ பரியாசம் அடிக்கானுவோ என்பதை மனசிலாக்கிக் கொண்டு, ''என்னடே...'' என்றேன்.

''பண்ணிப்பாருங்கோ... தெரியும்... யாரப்பே...'' என சிதறிச் சிதறிச் சிரித்தான். அவசரம் என்பதால் குழிவெட்டும் இடத்துக்குப் போய்விட்டேன்.

பதினோரு மணி இருக்கும் குட்டியாப்பாவை யூசுப் கடைமுன்னால் பார்க்கும்போது கன்னத்தில் தாடி இல்லை. அடையாளம் தெரியவில்லை. எனக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து அவர் கன்னத்தில் தாடி இருந்தது. அவர்தானா என சந்தேகப்பட்டு உற்றுப் பார்த்தேன். நான் பார்க்கும்போது யூசுப் கடையின் தெக்குப்பக்க மூலையிலிருந்து ரெண்டு பயலுவோ, ''ஒய்... ஒரு லட்சம்...'' என சவுண்டு போட்டு மறைந்து கொண்டனர்.

''என்ன குட்டியாப்பா...'' என்றேன்.

''அத ஏண்டே கேக்கே... மானங் கெட்டுப்போச்சு... இப்போ இந்த தள்ளயத்தின்ல பயலுவளுக்கெல்லாம் என்னையக் கண்டா பரியாசம்...''

### பிர'வேசம்'!

தீவிர நவீன இலக்கியத்தில் இயங்கி வந்த எழுத்தாளர்கள் அடர்த்தி குறைந்து, இப்போது தமிழ் சினிமாவுக்கு கதை வசனம் எழுத வந்துவிட்டனர். சிலர் நடிக்கவும் வேஷங்கட்டியாயிற்று.

அஜயன்பாலா, விக்கிரமாதித்தியனைத் தொடர்ந்து இப்போது அரிதாரம் பூசி இருப்பவர் ஈழக் கவிஞர் வ.ஐ.ச. ஜெயபாலன். நார்வேக்கும் தமிழகத்துக்கும் மாறி மாறி உலா வரும் இக்கவிஞர், தனுஷுடன் முக்கியப் பாத்திரத்தில் 'ஆடுகளம்' படத்தில் களமிறங்கி உள்ளார். (இவரது பங்கேற்பால் களத்தில் ஏதேனும் பரபரப்பு நிகழுமா?)

''என்னான்னு சொல்லுங்கோ...'' நான் தனியாக அழைத்துப் போனேன். கதையாகச் சொல்லத் தொடங்கினார்.

**மு**ந்தா நேத்து காலையில பத்து மணிக்கு குட்டியாப்பாவுக்கு ஒரு போன். எடுத்து அலோ சொன்னா மறுமுனையில் பெண் குரல்.

'பக்கர் சாரா..?'

''நம்மள எவா சாருன்னு கூப்பிடு

தான்னு நெனைச்சிட்டே ஆமாண்ணே பாத்துக்கோ...

'மேல வீடு எம்.ஆர்.பக்கர்'

'எஸ்...'

'கங்கிராஜுலேஷன் சார்...'

என்ன விசயம்னேன்!

'யு ஆர் எ லக்கி மேன்...'

'லக்கி மேன் இல்லம்மா... நான் பக்கர்... பி.பக்கர் வாப்பா பேரு பாதுஷா...'

'கரெக்ட் சார்... உங்களுக்கு எங்க கம்பெனி குலுக்கல்ல ஒரு லட்சம் பரிசு விழுந்திருக்கு...'

போன் காதுல இருந்து கீழே விழுந்துட்டு பாத்துக்கோ...

'என்னம்மா..?'

'ஒரு லட்சம் பரிசு விழுந்திருக்கு...'



அவளின் சிரிப்பு சலங்கை கட்டி போன் வழியாக குட்டியாப்பாவின் காதுகளை நிச்சலம் மூட்டியது.

'சாயங்காலம் அஞ்சு மணிக்கு உங்க மனைவியையும் கூட்டிட்டு வாங்க' அட்ரஸ் சொன்னா பார்த்துக்க.

வீட்ல இருக்காளே உனக்க குட்டிம்மா அந்த துக்கேட்ட சொன்னேன்.

'ஒரு மனுசாளுக்குத் தெரியப்புடாது... மூச்சு உடப்படாது. நேரா போய் பொறையும் பொழுதிட்டே ஆட்டோக்கு சொல்லுங்கோ. நாலரைக்கு வரச் சொல்லுங்கோ... அஞ்சு மணிக்கு முன்னால போயிடணும்னு சொன்னா.''

''ஏன் குட்டியாப்பா எங்கிட்ட என்னான்னு கேக்கவேண்டியது தானே''

''அவதான் வெலக்கிட்டா...''

''ம்...சரி... அப்புறம்..?''

''பொறையும் பொழுதுக்க ஆட்டோவுல நாலே முக்காலுக்குப் போய்ச் சேர்ந்தோம். அவ ஒரு பீத்தை பட்டுச் சேலையும் கட்டிட்டு வந்தா... நல்ல ஆபீஸு... ஏ.சி. போட்டிருந்தானுவோ...

நல்லா சேலா... ரெண்டு மூணு கொமரிப் பிள்ளைய இருந்தாளுவோ... ரெண்டு மூணு பயலுவோ... டையும் மயிரும் கெட்டிட்டு... சர்ட்டுபுர்ட்டுன்னு நின்னானுவோ...''

'மிஸ்டர் பக்கர் ரேஷன் கார்டு ப்ளீஸ்...'

'இன்னாங்கோ...'

கூல்டிரிங்ஸ் வந்து... தள்ளயத்தின்ன ஸ்டிராவத் தூக்கிப் போட்டுட்டு குடிச்சேன். உனக்க குட்டிம்மா பைய்ய சொல்லுதா... கேட்டியளா... போவத்துல ஷாஜகான் ஜுவல்லர்ஸுக்குப் போயிட்டுப் போலாம்னு.

ஒருத்தி வந்து ஒரு திட்டத்தைப் பத்திச் சொன்னா... ம்... கொட்டிட்டு இருந்தேன்... இலவச பாலிஸியாம்... கடைசியிலதான் சொன்னானுவோ... நான் பத்தாயிர ரூபாய் கட்டணுமாம்... வந்ததே கோவம். கைய ஓங்கினேன்.

டை கட்டுனவன் மிஸ்டர்ன்னு கைய பிடிச்சான். ஊர ஏமாத்தியாலே... சும்மா கெடந்தவன்ட்ட போனைப் போட்டு ஒரு லட்சம் விழுந்திருக்குன்னு சொல்லிட்டு... பரியாசமாலே அடிக்கியோ...னு குதிச்சேன்.

வல்லாதியுமா பொறயும் பொழுதும் என்ன சமாதானப்படுத்தி கீழே கூட்டிட்டு

வந்தான். ஆட்டோவுல கெடந்து உனக்க குட்டிம்மா சிரிக்கா.... அவன்ட்ட சொன்னேன்... நல்லா இருப்பே மக்கா யார்ட்டயம் சொல்லாதேன்னு...

சரி...பக்கராக்கா. இதப்போய் சொல்லுவேனான்னு சொல்லிட்டு ஒருத்தன் பாக்கி விடாம பரப்பிட்டான்னா பாத்துக்கோ...''

குட்டியாப்பா கதையை உப்பாவிடம் சொன்னேன். அவர் ரொம்ப நேரம் சிரித்தார்.

முன்னமே குட்டியாப்பா என்றால் ஊரில் பயலுவளுக்குப் பரியாசம்தான்.

ஒரு காலையில் குட்டியாப்பா தெங்கம் மூட்டுக்குப் பின்னால் காலைக்கடனுக்கு உட்கார்ந்திருந்தபோது கண்மணியே பேசு பாடல் ஒலித்தது. மடியிலிருந்து போனை எடுத்து பச்சையை அமுக்கியபடி ''அலோ...'' என்றார்.




மறுமுனையில் ''கக்கா போயாச்சா...''

அங்குமிங்கும் திரும்பித் திரும்பிப் பார்த்தார்.

''எவம்புலே... அது...''

''அது முக்கியமில்லே... போயாச்சின்னா எழும்பிப் போவும்...''

பளிச்சென எழுந்து செவப்பை அமுக்கியபடி ஏசிக்கொண்டே நடந்தார். வீட்டு வாசலில் நின்ற பொண்டாட்டியிடம் சொன்னார்.

''கேட்டியா... என்னய வாழ உடமாட்டானுவோ போலத் தெரியுது...''

குட்டியாப்பாவின் இப்படியான நகர்தலில்தான் ஒரு லட்சம் மேட்டர் பயலுவளிடம் சிக்கி இருக்கிறது. திசைக்கு ஒருத்தனாகத் துளைத்து எடுக்கின்றனர்.

''அலோ...''

''காலம் ரொம்ப கெட்டுக் கெடக்கு...''

''அது கெடக்கட்டும் வாப்பா... நீ யாரு...''

''அதான் சொல்லம்புலா... காலம் ரொம்ப கெட்டுக் கெடக்குன்னு... பைசாவ... வீட்ல வைக்காதேங்கோ... பேசாம ஒரு லட்சத்த முக்கு ரோடு சொர்ணம் பைனான்ஸ்ல போடுங்கோ...''

நேராக அவரைப் பார்த்துச் சிரிக்காமலிருக்க திரும்பிக் கொண்டேன்.

குட்டியாப்பா மதரஸாவில் வைத்து ''எனக்கொரு வழிபண்ணித்தாடே'' என்றார். பிறகு அவரே சொன்னார்.

''பேசாம போலீஸ்ல கம்பிளைண்டு பண்ணிட்டா என்னா...''

''என்னான்னு கம்பிளைண்டு... பண்ணது...''

''கிண்டானுவோன்னு சொல்லணும்...''

''எதுக்குன்னு கேப்பானுவோ... எல்லா கதையும் அவனுவள்ட்டயும் சொல்லணும்....

புது நம்பர் வாண்டலாம்... ஒருத்தர்ட்டயும் நம்பரைக் கொடுக்கா




- வெ.சீதாராமன்

தேங்கோ... சந்தை ரோட்ல கடை வச்சிருக்கான்லா ஏஞ்சல் செல் வோல்டு... அவன்ட்ட வாண்டலாம்...''

**கா**லையில் எட்டரை மணிக்கே வந்து விட்டார்.

''ராத்திரி ஒரு கண்ணு உறக்கம் கிடையாது... பதினேளு போன்''

''சரி... விடுங்கோ...'' என முதல் வேலையாக அவரின் சிம்மைக் கழற்றி தலையைச் சுற்றி முனிஸிபாலிட்டி ஓடையில் வீசிவிட்டு ஏஞ்சலைப் பார்த்து புது சிம்கார்டு வாங்கி எல்லா வேலையும் உசிதமா முடிந்துவிட்டது.

''குட்டியாப்பா... ஒரு ஈ காக்காக்கு நம்பர் தெரியப்புடாது...''

''ரூஹ் போயிட்டாலும்... எவன்ட்டயும் சொல்ல மாட்டேன்...''

குட்டியாப்பா ஆசுவாசமாகப் போனார்.

காலை பத்து மணி இருக்கும். ஏஞ்சல் செல்வேர்ல்டு கடை தாண்டி மறைவாக பொறையும் பொழுதுமின் ஆட்டோ நின்றது. பின்வால் தாஸீனும் ஆஷிக்கும். பொறையும் பொழுதும் மட்டும் இறங்கி வேகமாக ஏஞ்சல் ஓனரிடம் வந்தான்.

''பக்கராக்கா சிம் வாண்டுனாராம்... நம்பர் மறந்துட்டாராம்... எழுதி வாண்டிட்டு வரச் சொன்னார்...'' ஏஞ்சல் ஓனர் எழுதிக் கொடுத்தான்.

குட்டியாப்பா, வீட்டு நடையைச் சமுட்டவில்லை. மடியில் போன் ஒலித்தது. அதே கிண்டலான குரல்.

கடுகடுப்பாக காதில் செல்போனோடு கடந்து போகும் குட்டியாப்பாவைப் பார்த்தவாறே, திண்ணையிலிருந்த உப்பா தலையைத் தூக்கிச் சொன்னார்: ''நான் அன்னைக்கே சொன்னம்புலா... அவன் இப்லீஸ மடியில கட்டிட்டுப் போறாம்னு...'' ●

25

குகை என்றால் சூழ்ந்திருத்தல் என்று அர்த்தம். எது சூழ்ந்திருக்கிறது இங்கே என்றால், இருள்! இருட்டு சூழ்ந்திருப்பதால் குகை என்று பெயர்.

ஒரு மரத்தில் பொந்து இருக்கிறது என்று வைத்துக்கொள்வோம்; அல்லது மலையிலே குகை. அதற்குள்ளே போய்விட்டால் ஒரே இருட்டாக இருக்கும். நம் மனத்துக்கு ஏன் குகை என்று பெயர் வந்தது என்றால், அஞ்ஞானமாகிற இருட்டு அதில் சூழ்ந்திருப்பதால்தான்! அந்தக் குகையிலே கொண்டுபோய், பிரகாசமாக இருக்கிற பரம்பொருளை வைத்தால் இருள் போய்விடும். அதனால்தான் குகைக்குள்ளே இருக்கக்கூடியவரான முருகப்பெருமானுக்கே ஞான பண்டிதன் என்று பெயர். ஞானத்தின் ஸ்வரூபமாக இருக்கக்கூடியவன் சக்தி ஸ்கந்தன்.

அம்பாள் என்ன பண்ணுகிறாள்...? அவள் சிவ-சக்தி ஸ்வரூபம்தானே? சிவனுடைய அக்னி - நெருப்பு - நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றக்கூடிய ஆற்றல் - அது வெளிப்பட்டபோது, அதைப் பதப்படுத்தி ஸ்கந்தனாக - ஞான ஆற்றலாக - மாற்றுகிறாள்.

நெற்றிக்கண்ணிலிருந்து வெளிப்பட்டது உக்கிரமான நெருப்பு - கோபாவேசத்தோடு வந்த நெருப்பு. நெற்றிக்கண்ணிலிருந்து நெருப்பு வெளிப் பட்டபோது மன்மதன் என்ன பாடு பட்டான் என்பது நமக்குத் தெரியும். குமார சம்பவத்துக்கு முன்னால்தான் மன்மதன் எரிந்து போனான்!

ஆகவே, அடுத்து மீண்டும் நெற்றிக்கண்ணிலிருந்து நெருப்பு வெளிப்பட்ட போது, அம்பாள் அதைப் பதப்படுத்துகிறாள். அந்த நெருப்புப் பொறிகளை முதலில் அக்னி தேவனிடத்தில் போகச் செய்கிறாள். அவன் அதை அப்படியே தாங்கிக் கொண்டு கங்கை கரைக்குக் கொண்டு போகிறான். கங்கையிடம் போனவுடனே குளிர்ச்சி. நெருப்பைக் கொண்டு தண்ணீரிலே போடவும் அது உடனே குளிரத் தொடங்கிவிட்டது. அதற்கு மேலும் குளிர்ச்சியைக் கொண்டு வருவதற்காக, அந்தப் பிரதேசத்தில் இருந்த ஒரு சின்ன மடு - பொய்கை, அதனிடத்திலே எடுத்துப் போகிறான். கங்கையிலிருந்து கொஞ்சம் தண்ணீர் மட்டும் வந்து ஒரு சிறு குளம் போல் தேங்கியுள்ள இடம் அது. அந்த இடத்திலே கொண்டு போய் அக்னி தேவனும் வாயுதேவனும் நெருப்புப் பிழம்பைப் போடுகிறார்கள். அது அப்படியே குளிர்ந்து போகிறது.

# ஸ்ரீ லலிதா
## மூன்றாம் பாகம்

# குஹ ஜனனி!

### குளிர்ந்த நெருப்பு!

இதில் என்ன விசேஷம் என்றால், ஒரு சின்னஞ்சிறு குளத்திலே கொண்டுபோய் ரொம்ப உக்கிரமான நெருப்பைப் போட்டோமானால், சாதாரணமாக அந்தத் தடாகமே வற்றிப் போகும். ஆனால், இங்கே நேர்மாறாக, பொய்கை வற்றுவதற்குப் பதி

சுதா சேஷய்யன்

லாக, நெருப்பு குளிர்ந்து போகிறது. அந்தப் பொய்கையைச் சுற்றிலும் மூங்கில் காடு. அந்த மூங்கில் காட்டிலே அந்த நெருப்பு வளர்ந்தது. ஆறு குழந்தைகள் ரூபத்தில், ஆறு பெண்கள் வளர்க்க வளர்ந்தது.

சாதாரணமாக மூங்கில் காட்டில் கொண்டு போய் நெருப்பை வைத்தால், அது அழிந்து போகும். ஆனால், இந்த மூங்கில் காடு அழியவில்லை. அம்பாளின் ஆக்ஞையால் அந்தத் தீ குளிர்ந்து வளர்ந்தது! மூங்கில் காட்டினிடையே ஆறு பெண்கள் எடுத்து வளர்க்க, ஆறு குழந்தைகளின் ரூபத்தில் அது வளர்ந்தது. சர வனத்தில் (மூங்கில் காட்டில்) வளர்ந்ததால் முருகனுக்கு சரவணன் என்றும் ஒரு பெயர். அந்த நெருப்பை அம்பாள் குளிர்வித்து, குளிர்வித்து, அதில் நெருப்பின் ஜொலிப்புத் தன்மையும் இருக்கும்படி பார்த்துக் கொண்டாள். உக்கிரமும் இல்லாமல் அருளினாள்.

**சர வனத்தில் (மூங்கில் காட்டில்) வளர்ந்ததால் முருகனுக்கு சரவணன் என்றும் ஒரு பெயர்.**

இவ்வாறு வளர்ந்த ஆறு குழந்தைகளின் ஆற்றலையும் சேர்க்க வேண்டும் என்கிறபோது, அம்பாள் போய் ஆறு குழந்தைகளையும் சேர்த்துக் கட்டிக் கொள்கிறாள். ஆறும் ஒன்றுசேர்ந்து ஸ்கந்தன் என்று உருப் பெற்றன. ஸ்கந்தன் என்றால் திரண்டது என்று அர்த்தம்.

ஆற்றலையெல்லாம் ஒன்று சேர்த்து குஹனை உருவாக்கியவள் குஹ ஜன்ம பூ - அஞ்ஞான இருட்டைப் போக்கக்கூடிய குஹனாக, ஒளிப்பிழம்பாக வந்தான் ஸ்கந்தன். அம்பாள், நெருப்புப் பொறிகளை எப்படிப் பக்குவப்படுத்தியிருக்கிறாள் என்றால், அதிலுள்ள உக்கிரத்தை மட்டும் குறைத்திருக்கிறாள். ஆனால், அதன் ஒளி விடும் தன்மை அதிகப்படும்படி செய்திருக்கிறாள். ஆகவே, உள்ளேயிருக்கக்கூடிய அஞ்ஞானத்தைப் போக்கும் ஞானப் பிரகாசனான முருகப்பெருமானின் தாய் என்பது இந்தத் திருநாமத்துக்கு (குஹ ஜன்ம 'பூ:') ஓர் அர்த்தம்.

### மன குகை

இன்னொரு அர்த்தமும் உண்டு :

ஜீவிதர்களுக்கே குஹ்யர்கள் என்று ஒரு பெயர். மனசுக்குள்ளே இருட்டை வைத்துக் கொண்டிருக்கிறவர்கள். குகையைத் தேடிக் கொண்டு வேறு எங்கேயும் போக வேண்டாம்! நம் மனசுக்குள்ளேயே இருக்கிறது. ஸ்காந்தத்தில் வரும் கதையிலே தாரகாசுர வதம் குறிப்பிடப்பட்டுள்ளது. அந்த தாரகாஸுரன், கிரௌஞ்ச மலையைத் தன் அருகிலே வைத்துக் கொண்டிருந்தான். அது அவனுக்கு ஒன்றுவிட்ட சகோதரன் முறை! ராக்ஷஸர்கள் எப்படி வேண்டுமானாலும் தோற்றம் எடுத்துக் கொள்வார்கள்.

இந்தக் கிரௌஞ்சத்தில் அங்கங்கே குகைகள் இருந்தனவாம். அதன் அருகே யாராவது போனால், கிரௌஞ்சன் வெறும் மலையாக நிற்பான். ஏதேனும் குகைக்குள் யாரேனும் நுழைந்துவிட்டால் போதும், வெளியே வர முடியாது! இந்தப் பக்கமாகப் போய், அந்தப் பக்கமாக வந்துவிடலாம் என்று நினைப்பவர்கள், அவ்வளவுதான், ஒரு முடிவைச் சந்திப்பார்கள்!

அப்படிப்பட்ட குஹை போன்ற மனம் இருட்டு மனம் - படைத்தவர்களுக்கு குஹ்யர்கள் என்று பெயர். தன்னிலிருந்து இந்த ஜீவிதர்களையெல்லாம் தோற்றுவித்தவள், அந்த ஸ்ரீ மாதாவுக்குத்தான் குஹ ஜன்ம பூ என்று இன்னொரு திருநாமம்.

**தேவேசி** - இது அடுத்த திருநாமம்.

✱ வடமொழியில் நான்காவது பூ





தேவர்களுக்கெல்லாம் தலைவியாக, ஈசுவரி யாக இருப்பவள்.

**தண்டனீதிஸ்தா** - தவறு செய்பவர்களுக் குத் தண்டனை தரக்கூடியவள்.

**தகராகாசரூபிணி** - ரொம்ப அழகான திருநாமம் இது. தகராகாசம் என்பது சூட்சுமமான ஆகாசம். இதற்கு நேரடியாகப் பொருள் பார்த்தோமானால், சிறியதான, அல்பமான ஆகாயம் என்று ஆகும்! "ஆகாசத்தில் சிறியது பெரியது என்று பாகு பாடு உண்டா?'' என்று கேட்கத் தோன்றும்.

ஆங்கிலத்தில் macrocosm, microcosm என்று வேறுபடுத்திச் சொல்லுவார்கள்.

வெளியிலே தெரியக்கூடிய ஆகாசம் பெரிய ஆகாசம் என்று வைத்துக் கொள் வோம். உள்ளுக்குள்ளே வேறு ஆகாசம் இருக்கிறது. இந்த தகராகாசம் என்பதுதான் நம் ஹ்ருதயத்தில் இருக்கக்கூடிய ஆகாசம்.

ஆகாச ரூபிணியான அம்பாள், நம் ஹ்ருதயத்தில் இருக்கிற தகராகாசத்திலும் இருக்கக்கூடியவள்.

உடலின் ஆதாரச் சக்கரங்களைப் பற்றி நாம் பார்த்தபோது, பஞ்சபூதங்களுக்கும் ஒவ்வொரு சக்கரம் உரியதென்று ஒரு விளக்கம் பார்த்தோம். அதிலே ஆகாசத் துக்கு உரிய ஸ்தானம் உபரி என்பது. அப்படியானால், மிக மேலே போயாயிற்று. அவ்வாறு இருக்கிறபோது, ஹ்ருதய ஸ்தானத்து ஆகாசம் என்று சொல்வது முன் னுக்குப் பின் முரணாகத் தோன்றும். ஆனால், இதைக் கொஞ்சம் முறையான ரீதியில் யோசித்துப் பார்த்தால் புரியும்....

**(வளரும்)**

கிண்டல் கேலி

# அம்மா தாயே... ஆஸ்கர் போதுங்கம்மா!

*(வடிவேலு கையில் தினசரி பேப்பருடன் விவேக் வீட்டுக்கு அவசரமாய் ஓடி வருகிறார். ஓடி வந்தவர் மூச்சு வாங்கியபடி விவேக்கிடம் பேப்பரைக் காட்டுகிறார்)*

**விவேக்:** என்ன சகலை நாக்கு நாலடிக்குத் தொங்குது... பொண்ணைக் கையப் புடிச்சி இழுத்து ஊரே விரட்டிக்கிட்டு வர்ற மாதிரி ஓடியாறே... என்ன விஷயம்?

**வடிவேலு:** பேப்பர்ல என்ன போட்டிருக்குன்னு பாரு...!

**விவேக்:** (பேப்பரில் படித்து) ஐந்தாவது புருஷனையும் அம்மிக் கல்லைப் போட்டுக் கொலை செய்த பெண்மணி. இதுதான் அடிக்கடி நடக்குதே...

**வடிவேலு:** எதைப்படிக்கச் சொன்னா எதைப் படிக்கிறே நீ... இதைப் படி சகலை.

**விவேக்:** ஏ.ஆர். ரகுமானுக்கு இரண்டு ஆஸ்கர் விருது, நல்ல விஷயம்தானே...

**வடிவேலு:** நல்லதுதான்... ஆனா அவருக்கு ரெண்டு கொடுத்தவங்க... அப்படியே நமக்கும் ஆளுக்கொண்ணு கொடுத்திருக்கலாமில்ல?

**விவேக்:** ஓ... ஆமாயில்ல., கொடுத்திருக்கலாம்தான். ஒருவேளை ஷீல்டு கம்மியா செஞ்சிருப்பாங்களோ...

**வடிவேலு:** சிலைடுன்னா சினிமா தியேட்டர்ல போடுவாங்களே அதுதானே.

**விவேக்:** அதில்லை... ரகுமான் காட்டிக்கிட்டு போஸ் கொடுக்கிறாரே அந்தச் சிலை.

**வடிவேலு:** ஓ... அந்தப் பொம்மையா., ஆர்டர் கொடுக்கும்போதே ரெண்டு சேர்த்துச் செய்யச் சொல்ல வேண்டியது தானே.

**விவேக்:** ஆமா... அந்த ஆஸ்கர் கமிட்டி ஆங்கிலேயனுங்க... விருது எதுக்கு உங்களுக்குன்னு கேள்வி கேட்டா...

**வடிவேலு:** (முதுகுக்குப் பின்னால் இருந்து ஒரு வீச்சருவாளை உருவி) இதோட போவோம். விருது கேப்போம். பொட்டிக் கடையிலேர்ந்து போண்டா கடை வரைக்கும் இதைக் காட்டித்தானே பல பேர் பொழப்பு நடத்தறாங்க. நாமளும் நெஞ்ச வெடைச்சிக்கிட்டுப் போவோம்.

**விவேக்:** வீச்சருவா எல்லாம் அங்க வேலைக்காகாது சகலை. எல்லார் கையிலும் 'வெப்பன்' இருக்கும். கஷ்டப்பட்டு சாதிக்கிறவங்களுக்கு மட்டும்தான் அந்த விருது தருவாங்க.

**வடிவேலு:** ஏன்... சகலை நாமெல்லாம் கஷ்டப்படலையா... மூத்திரச் சந்துல வெச்சி முப்பது பேர் மூணு நாளா என்னை அடிச்சாங்களே அதுக்குத் தரட்டும்.

**விவேக்:** நா மட்டும் என்ன... அந்நியன்ல அம்பிக்கும் அபிதகுஜலாம் பாவுக்கும் லவ்வு வர எவ்வளவு கஷ்டப் பட்டேன்.

**வடிவேலு:** அது அபிதகுஜலாம்பா இல்லே... நந்தினி...

**விவேக்:** ஒரு படம் இரண்டு படத்துல இதை மாதிரி நடிச்சோம்னா பரவாயில்லை.

எக்கச்சக்க படத்துல இதே ரோல்தானே... அதான் ஒரு ஸ்மால் கன்ப்யூஷன். ஐடியா கொடுத்துக் கொடுத்தே மூளைல ஒரு சைடு வேலையில்லாம சும்மா கெடக்குது தெரியுமா?

**வடிவேலு:** அது மட்டுமா... கட்ட துரைகிட்ட, கைப்புள்ளையா நான் பட்ட பாடு கொஞ்சமா.. கண்ட எடத்துல எல்லாம் தூக்கிப் போட்டு மிதிச்சாங்க.



அதுக்காச்சும் தரலாம்.

***(அப்போது கஞ்சா கருப்பும், கருணாஸும் ஓடி வருகின்றனர்)***

**விவேக்:** உங்களுக்கு என்னடா ஆச்சு?

**கருணாஸ்:** வடிவேலு அண்ணன் ஓடி வந்ததைப் பார்த்துட்டு பின்னாடியே ஓடிவந்தோம்.

**கருப்பு:** ஓடிவந்து இவ்வளவு நேரம் நீங்க பேசுனதை ஒட்டுக் கேட்டுட்டு இருந்தோம்.

**வடிவேலு:** ஆனா ஓடிவந்த மாதிரி மூச்சு வாங்கினீங்க.

**கருணாஸ்:** சும்மா ஒரு பில்டப் தான்.

**விவேக்:** சரி எதுக்கு வந்தீங்க...?

**கருப்பு:** தாயா புள்ளையா பழகறோம். எங்கள விட்டுப்புட்டு நீங்க மட்டும் ஆஸ்கர் விருது வாங்கினா நல்லாவா இருக்கும்... கஞ்சா கருப்பு சினிமாவுக்கு வந்து கஞ்சிக்கில்லாம செத்தான்னு இல்லாம, அட்லீஸ்ட் ஒரு ஆஸ்கர் விருது வாங்கிட்டுச் செத்தான்னு வரலாறு எழுதட்டும்ணே... கையோட என்னையும் கூட்டிட்டுப் போங்க சாமி... உங்க பொண்டாட்டி புள்ளைங்களுக்குப் புண்ணியமாப் போகும்.

**கருணாஸ்:** ஆமாண்ணே. வந்தா... ஆஸ்காரோட வா... இல்லேன்னா எதாச்சும் கோயில்ல பிச்சையெடுத்து பொழைச்சிக்கோன்னு எம் பொண்டாட்டி... சொல்லிட்டா... அதையும் மீறி வெறுங்கையோட போனேன்னா தார் ரோடு போடுற ரோலர்ல நசுங்கின தக்காளி மாதிரி ஆக்கிடுவாண்ணே. நீங்கதான் காப்பாத்தணும்.

**விவேக்:** யாரும் கவலைப்படாதீங்க. ஆஸ்கர் விருதுதானே வேணும். நான் ஏற்பாடு பண்றேன்.

**ரஹ்மானுக்கு ரெண்டு கொடுத்தாங்க.நமக்கு இன்ஸ்டால்மெண்ட்டிலயாவது ஆளுக்கு ஒண்ணு கொடுக்கலாமில்ல!**

**வடிவேலு:** உன்னால முடியுமா சகலை?

**விவேக்:** உனக்கு வேணா ரிஸ்க் எடுக்கறது ரஸ்க் சாப்பிடற மாதிரி இருக்கலாம். ஆனா எனக்கு ஆஸ்கர் எல்லாம் அஸ்கா வாங்கற மாதிரி. எல்லாரும் ஒரு ஷேர் ஆட்டோ பிடிச்சி என்னை ஃபாலோ பண்ணிட்டு வாங்க...

**கருப்பு:** ஆட்டோவுலயே அமெரிக்கா போக முடியுமா பாஸ்?

**விவேக்:** அமெரிக்கா போகாமலே ஆஸ்கர் வாங்க நான் ஏற்பாடு பண்றேன். அப்படியே நம்ம அடிபொடிகள் சிங்கமுத்து, போண்டாமணி, முத்துக்காளை எல்லாரையும் மேளதாளத்தோட ஏர்போர்ட்டுக்கு வரச் சொல்லிடு.

*(அனைவரும் ஒரு ஷேர் ஆட்டோவில் ஏறி அமர்ந்துகொள்ள, விவேக், ஆட்டோவை அசோக்நகருக்கு ஓட்டச் சொல்கிறார். பின் ஒரு சந்தில் ஆட்டோவை நிறுத்திவிட்டு, இறங்கிப் போகும் விவேக் சற்று நேரத்தில் கையில் நான்கைந்து ஷீல்டுடன் ஓடி வருகிறார்)*

**விவேக்:** இந்தாங்க நீங்க கேட்ட ஆஸ்கர் விருது. (ஆளுக்கொன்றாகக் கொடுத்துவிட்டு) ஆட்டோவை ஏர்போர்ட்டுக்கு ஓட்டுப்பா.

*(ஏர்போர்ட்டில் மேளதாளத்துடன் துணைநடிகர்கள் நிற்க... பயணிகளோடு பயணிகளாய்க் கலந்து விவேக், வடிவேலு, கருணாஸ், கருப்பு அனைவரும் வெளியே வருகின்றனர்)*

**போண்டாமணி:** ஆஸ்கர் விருது வாங்கிய அண்ணன் வாழ்க...

**சிங்கமுத்து:** ஆஸ்கர் திலகமே வருக... வருக...

*(என்று கோஷமிட்டுக் கொண்டிருக்க, அங்கே போலீஸார் வந்து விவேக்கைக் கைது செய்கின்றனர்.)*

**வடிவேலு:** ஏம்பா... போலீசு... ஆஸ்கர் விருது வாங்கின இவரை ஏன் அரெஸ்ட் பண்றீங்க...?

**போலீஸ்:** இதெல்லாம் ஆஸ்கர் விருதில்ல...

**வடிவேலு:** பின்ன...?

**போலீஸ்:** ஆஸ்கர் பிலிம்ஸ் சினிமா கம்பெனி ஷோகேஸ்ல வெச்சிருந்த ஷீல்டுகள். யாருமில்லாதப்ப எடுத்துட்டு வந்திருக்கார்.

***(என்று சொன்னதும், ஐயய்யோ என்று ஆளாளுக்கு தலைதெறிக்க ஓடுகின்றனர்)***

# நீங்கள் கேட்டவை - தராசு



## பூங்கோதை மீண்டும் அமைச்சராகி விட்டாரே?

● சி.இந்து அழகேஷ், கள்ளக்குறிச்சி

? ஜெ.வுக்கு அன்பழகன் பிறந்த நாள் வாழ்த்து தெரிவித்துள்ளது குறித்து?

! தி.மு.க. ஆட்சி தமிழகத்தில் நடப்பதைக் காண நீங்கள் நீடுழி வாழ வேண்டும் என்று சொன்னது சின்ஸியர் வாழ்த்து அல்ல; சில்மிஷ வாழ்த்து.

● பாலா, உடையநாடு

? இந்தியாவில் தடைசெய்யப்பட்ட விடுதலைப் புலிகளை அ.தி.மு.க., காங்கிரஸ் நீங்கலாக கிட்டத்தட்ட எல்லா கட்சிகளுமே வெளிப்படையாக ஆதரித்துப் பேசுகின்றனவே. மத்திய அரசு ஏன் இவர்கள் மீது நடவடிக்கை எடுக்கத் தயங்குகிறது?

! சட்டம் ஒழுங்கு மாநில அரசு விவகாரம் என்பதால்தான். தி.மு.க. தலைவரோ கூட்டணி, தேர்தல், வோட்டு வங்கி என்று ஆபத்தான தப்புக் கணக்கு போட்டுக் கொண்டிருக்கிறார்!

● கு.அருணாசலம், தென்காசி

? தகவல் தொழில்நுட்பத் துறை அமைச்சராக மீண்டும் பதவி பெற்றுள்ளாரே பூங்கோதை ஆலடி அருணா?

! தயாநிதி மாறன் நம்பிக்கையுடன் நாடாளுமன்றத் தேர்தல் பணிகளில் ஈடுபடுவார். இதெல்லாம் தி.மு.க.வுக்குக் கைவந்த தொழில் நுட்பம். இத்தகைய அநீதிகளை ஞாபகம்

★ பழகிய தொழில்நுட்பம்!

வைத்துக் கொண்டு வோட்டுப் போட்டால், அது மக்களின் மதிநுட்பம்.

● அ.பேச்சியப்பன், ராஜபாளையம் ★

? எல்லா மட்டங்களிலும் வன்முறை பெருகி வருவதற்கு யார் காரணம்?

! வன்முறை வெடித்த பிறகே பிரச்னையைக் கவனிக்கும் ஆட்சி; வன்முறையை ஆயுதமாகக் கொண்டுள்ள அரசியல்; அதை ஒரு சாகசமாகச் சித்திரிக்கும் சினிமா; நமக்கு வேண்டாதவர்கள் வன்முறைக்கு உட்படும் போது, அதை அவர்களுக்கு வழங்கப்பட்ட நீதியாகக் கற்பித்துக் கொண்டு மகிழும் நாம்... எல்லோரும்தான் காரணம்!

● மல்லிகா அன்பழகன், சென்னை-78

? மங்களூரை தலிபான் நகரம் என்று சொன்னதற்காக ரேணுகா சௌத்ரி மீது வழக்கு தொடரப்பட்டுள்ளதே?

! சம்பவத்தின் சாயலை வர்ணிக்க முயன்று ஆகுபெயர் உருவாக்குகிறார்; அவ்வளவுதான். வழக்கெல்லாம் வேஸ்ட்!

● என்.கோதண்டராமன், மதுராந்தகம்

? தமிழர்களைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு இருப்பதால் பதவியைத் துறக்க விருப்பமில்லை என்று முதல்வர் கூறியிருக்கிறாரே?

! கோழி கூவித்தான் பொழுது விடிகிறது என்ற மனப்பான்மை சரியானதல்ல. 'தமிழர்களை' என்ற சொல்லுக்

குப் பதில் 'கட்சியை' என்ற வார்த்தையைப் பயன்படுத்தியிருந்தால் ஓரளவு ஏற்கலாம்.

● **பி.என்.ஜெய்சங்கர், திருவாரூர்**

**? பாக் அரசு-தலிபான் ஒப்பந்தம், இந்தியாவின் பாதுகாப்புக்கான அச்சுறுத்தலை அதிகரித்துள்ளது என்று ராணுவ அமைச்சர் ஆன்டனி கவலைப்படுகிறாரே?**

! உங்கள் கேள்விக்குப் பதில் எழுதும் இந்த நேரத்தில், பாகிஸ்தானில் கிரிக்கெட் ஆட வந்த இலங்கை கிரிக்கெட் வீரர்கள், பயங்கரவாதிகளின் துப்பாக்கிச் சூட்டில் காயப்பட்டிருக்கிறார்கள். அச்சுறுத்தல் இந்தியாவுக்கு மட்டுமல்ல; பாகிஸ்தானுமே ஆபத்தில் இருக்கிறது!

● **கருப்பம்புலம் சித்திரவேலு, நெய்விளக்கு**

**? ''1989-90ல் நான் பேசிய பொதுக்கூட்டத்தில் சோடா பாட்டில் எறிந்து, கல் வீசி கலாட்டா பண்ணினா அவரோட ஆட்கள். அதுக்கப்புறம் சென்ட்ரல் மினிஸ்டர் ஆனதும் அவரோட ஆட்சியை டிஸ்மிஸ் பண்ணிட்டேன். பிறகு கருணாநிதி எங்கிட்டே அவ்வளவா வைச்சுக்கறதில்லையே'' என்று சு.சுவாமி பேசியுள்ளாரே?**

! அவரிடம் 'வெச்சு'க்கிற அளவுக்கு சு.சுவாமியோ அவர் கட்சியோ அப்படியொன்றும் வளர்ந்துடலியே!

* ஆகுபெயர் அணங்கு!

* சில்மிஷ வாழ்த்து!

* கோழி கூவியா...?

* லேட்டஸ்ட் கவலை

● **தாமஸ் மனோகரன், புதுச்சேரி**

**? 'தி.மு.க. ஆட்சியைக் கவிழ்க்க போலீஸார் சதி' என்று திருமாவளவன் கூறியிருக்கிறாரே?**

! எதற்கெடுத்தாலும், ''ஆட்சியைக் கவிழ்க்க சதி''ன்னு தி.மு.க. தலைவர் சொல்றதைக் கேட்டுக் கேட்டு போரடிச்சுப் போச்சு! ஒரு சேஞ்சுக்கு இவர் சொல்லிட்டுப் போறாரு, விடுங்க...

● **எஸ்.பக்கிரிசாமி, திருவாரூர்**

**? கிரிக்கெட்டில் சாதனை நிகழ்த்த முடியாத அசாருதீன், காங்கிரஸ் கட்சியில் சேர்ந்து என்ன சாதிக்கப் போகிறார்?**

! இன்றைய அரசியல் சூழலில், எலெக்ஷன் ஃபிக்ஸிங்குக்கு இடம் தராமலிருந்தாலே பெரிய சாதனைதான்!

● **க.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்**

**? கன்டெய்னர் எனப்படும் சரக்குப் பெட்டகங்கள் மூலம் பயங்கரவாதிகள் அணு ஆயுதங்களைக் கடத்தும் அபாயம் இருப்பதாக, இந்தியக் கடற்படைத் தலைவர் சுரேஷ் மேத்தா எச்சரித்துள்ளாரே?**

! அணு ஆயுதங்களைத் தங்கள் வீட்டுக் கொல்லைப் புறங்களிலேயே தயாரிக்கக் கற்றுவிட்ட பயங்கரவாத அமைப்புகளுக்கு, அவற்றைக் கடத்துவதா பெரிய காரியம்? கன்டெய்னரிலும்

கடத்துவர்; பாகம் பாக மாகக் கழற்றி கக்கத்தில் வைத்துக்கொண்டும் போய் விடுவர்!

● வெ.ராம்குமார், வேலூர்

**? ராஜ கண்ணப்பன் மீண்டும் அ.தி.மு.க.வில் சேர்ந்துவிட்டாரே?**

! கட்சிமாறத் தடைச் சட்டம் வந்த பிறகும் ஆயா ராம் - கயா ராம் கலாசாரம் மாறவில்லை என்பதை நிரூபிக்கிறார். அவர் மதிப்பு என்னவோ கயாதான் எந்தக் கட்சியானாலும் ஓரங்கட்டப்படுவார்.

● துரை.இராமகிருஷ்ணன், எரகுடி

**? வெளியுறவு அமைச்சர் பிரணாப் முகர்ஜி, "போர் நிறுத்தம் செய்யுமாறு இலங்கை அரசுக்கு இந்தியாவால் உத்தரவிட முடியாது" என்று திட்டவட்டமாக அறிவித்துள்ளது பற்றி?**

! இப்போது கொஞ்சம் டிராக் மாறி, புலிகளின் சமாதானத் தூதை ஏற்கவேண்டும் என இலங்கை அரசைக் கேட்டுக் கொண்டிருக்கிறாரே! அது நடக்கிறதோ இல்லையோ, அவர் கேட்டதே கருணாநிதியின் வயிற்றில் பாலை வார்த்துள்ளது! நிற்க. புலிகள் ஆயுதங்களைத் துறக்காமல் போர் நிறுத்தம் கோருவது வழக்கமான தந்திரம் தான்.



★ சேர்க்கக்கு...



★ எலெக்ஷன் ஃபிக்ஸிங்?



★ கயா ராம்!

● சுமாலி, மேலப்பாலையூர் ❑

**? வக்கீல்களுக்கு மட்டும் சட்டத்தின் பிடி இறுக மறுக்கிறதே? அவர்களென்ன, சட்டத்துக்கு அப்பாற்பட்ட தனியான சமுதாயமா?**

! இல்லை. ஆனால், நீதிமன்றம் என்ற மரியாதைக்குரிய அமைப்புடன் நெருக்கம் இருப்பதால், அந்த உறவை துஷ்பிரயோகம் செய்கிறார்கள். நீதிமன்றம் அவர்கள் பேரில் கடுமை காட்டத் தயங்குவதுதான் கவலை தரும் விஷயம்.

● ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி

**? விவசாயிகளுக்கான பென்ஷன் திட்டத்தை வரும் தேர்தலில் பா.ஜ.க. முன்வைக்கும் என்கிறாரே அத்வானி?**

! அரசு ஊழியர்களுக்குப் பென்ஷன் கொடுத்து மாளவில்லை என்று, அத்திட்டத்தையே கைவிட அரசு முற்படுகிற ஒரு காலகட்டத்தில், இது விபரீத வாக்குறுதி!

● ஆர்.பஞ்சவர்ணம், போளூர்

**? சினிமாவுக்குச் செய்யும் செலவு, புத்தகத்துக்குச் செய்யும் செலவு - இதில் எது தண்டச் செலவு?**

! அது நீங்கள் தேர்ந்தெடுப்பதைப் பொறுத்தது. உபயோகமான சினிமாவும் உண்டு; குப்பையான புத்தகமும் உண்டு.

**❑ ரூ.150/-பரிசு பெறுபவர் :**
**சுமாலி, மேலப்பாலையூர்**

**★ ரூ. 75/- பரிசு பெறுபவர் :**
**அ.பேச்சியப்பன், ராஜபாளையம்**

## கேம்பஸ் கதை

# உன்னை விரும்புவது...

எனக்குத் தெரியும்
நீ விரும்புவது
என்னையல்ல
என் கவிதைகளைத்தான்
என்று.
ஆனால்,
உனக்குத் தெரியுமா
உன்னை விரும்புவது
என் கவிதைகளல்ல -
நான்தான் என்று?

- பத்தாவது முறையாக மீண்டும் அந்த வரிகளிலேயே பரவின மாலதியின் விழிகள்!

'ம்... நன்றாகத்தான் இருக்கிறது. வெற்றிக்கு கவிதை எழுதத் தெரியுமா? நல்ல வாலிபால் ப்ளேயர் என்று தெரியும். பேச்சுப் போட்டி, கட்டுரைப் போட்டி களில் முகம் காட்டுவான். மேடையேறிப் பாடுவான். நெற்றியில் புரண்டு விழும் கேசத்தை அடிக்கடி இடக்கை யால் தள்ளிவிட்டுப் பேசுவது அவன் மேனரிசம்...'

வெற்றியைப் பற்றி நீண்ட எண்ணங்களைத் தடுத்தது அம்மாவின் குரல்!

''மாலு.... யாரோ வெற்றியாம்...''

சடக்கென்று எழுந்தாள். குபீரென்று பரவியது உற்சாகம்.

'ஏய் ராஸ்கல்... உன்னைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கிறேன் என்று தெரிந்து விட்டதா உனக்கு? இரு. அந்த நீண்ட மூக்கைப் பற்றித் திருகி விடுகிறேன்...'

தான் திருகுவது போலவும், அவன் அலறுவது போலவும் கற்பனை செய்து சிரித்துக் கொண்டாள்.

கண்ணாடியில் ஒரு முறை பார்த்துக் கொண்டாள்.

கருநீல நிறத்திலான டாப்ஸும், வெளிர் நீலத்தில் பாட்டமுமான அந்த சுடிதார் அவளை மேலும் அழகாகக் காண்பித்தது. அதில் சின்னதும் பெரிதுமாக வெள்ளை நிறப் பூக்கள் சிரித்தன.

'ம்... எப்படிப் பார்ப்பான்?' என்று அவன் தடுமாறுகிற பாவனையை அவள் மனம் காட்சியாக்கியது.

துள்ளிக் குதித்துப் படிகளை நெருங்கியவள் நின்றாள்.

'இல்லை... அவனைப் பிடித்திருக்கிறது என்பது அவனுக்குத் தெரியக் கூடாது. அமைதியாய் இரு. உனக்குள் எழும்பும் ஆர்ப்பரிப்பை அடக்கிக் கொள்' என்றது அறிவு.

மெல்லப் படிகளில் இறங்கினாள்.

''வாங்க வெற்றி, என்ன திடீர்னு...'' சகஜமாய்க் கேட்டாள்.

அவள் நினைத்த மாதிரியே வெற்றி பேச்சடங்கி நின்றான்.

முன்நெற்றியில் சுருண்டு அலையும் குழலையும், பளபளக்கும் கன்னங்களில் மோதி விளையாடும் ஜிமிக்கிகளையும், உதடுகளில் முகாமிட்டிருந்த சிரிப்பையும், 'என்னைப் பார்த்து பிரமிச்சுட்ட இல்ல' என்று கேட்கும் கண்களையும் பிரமை தட்டிய மாதிரி பார்த்தான்.

மாலதி உற்சாகமானாள்.

'படவா... நீ மலைச்சுப் போவேன்னு எனக்குத் தெரியுமே. வா... வாயைவிட்டு நீயே சொல்லணும், 'ஐ லவ் யூ மாலு'ன்னு, அதுவரைக்கும் நானும் சொல்லமாட்டேன்.'

மனம் முணுமுணுத்தது.

''என்னாச்சு வெற்றி, எனிதிங் ஸ்பெஷல்?'' என்றாள் மீண்டும்.

வெற்றி சுதாரித்துக் கொண்டான்.

''யெஸ் மாலு, நேத்து ராஜேஷைப் பார்க்க ஹாஸ்பிடல் போயிருந்தேன். அவன் இந்த ரெகார்ட் நோட்டை உன்கிட்ட கொடுத்துடச் சொன்னான்...''

எடுத்து நீட்டினான்.

ராஜேஷ், அவளின் காலேஜ் மேட்;

**• ஸ்ரீநிவாஸ ராகவன் •**



## கேரளாவில் 'சுப்ரமணியபுரம்'!

கடந்த ஆண்டு வெளியான படங்களில் திரையுலகின் ஒட்டுமொத்த கவனத்தையும் கவர்ந்த படம் 'சுப்ரமணியபுரம்.'

வணிக சினிமாவின் சூத்திரங்களையெல்லாம் உடைத்தெறிந்த இப்படத்தின் திரைக்கதை, மலையாளத்தில் நூல் வடிவமாகி இரண்டு பதிப்புகள் கண்டுள்ளது.

அண்மையில் கேரளாவில் 'மாத்ருபூமி' பத்திரிகை, 'சுப்ரமணியபுரம்' படத்தை கடந்த ஆண்டில் வெளியான படங்களில் இந்திய அளவில் 'The Best



வெற்றியின் நெருங்கிய நண்பன்!

பைக் ஆக்ஸிடண்டில் சிக்கி, ஆஸ்பத்திரியில் இருக்கிறான்.

''எப்ப டிஸ்சார்ஜ் பண்றாங்களாம் ராஜேஷை?''

''எப்படியும் டென் டேஸ் ஆகும்...''

''நடக்கறானா?''

''ம்... வாக்கர் வெச்சுதான் நடக்கறான்...'' என்ற வெற்றி எழுந்தான்.

''சரி; நான் ராஜேஷைப் பார்க்கப் போறேன் மாலு'' என்று வெளியேறினான்.

மாலதிக்கு ஏமாற்றமாய் இருந்தது.

'என்ன ஆச்சு இவனுக்கு? ஏன் பதறின மாதிரி ஓடிட்டான்? என்கிட்ட அவ்வளவு பதினைந்து நாள்தான்டா இருக்கு. இப்பவும் நீ சொல்லலைன்னா, இனி எப்பவுமே சொல்ல முடியாது.'

கோபமாய் மனத்துக்குள் திட்டினாள்.

நினைவுகள் இலக்கில்லாமல் புரண்டன.

'சரி; அப்ப அவனுக்கு என்னைப் பிடிச்சிருக்கா இல்லியா?'

கேள்வி அவளைத் திகைக்க வைத்தது.

''அவன் பார்வை; அதில் ததும்புகிற அன்பு; பார்த்தவுடன் அவனிடம் ஏற்படும் பரபரப்பு; பேச்சில் வரும் தயக்கம்... எல்லாம் நினைவில் ஓடி, 'அவன் காதலிக்கிறான்' என்று கூச்சலிட்டன.

**அவன் பார்வை; அதில் பொங்கித் ததும்புகிற அன்பு**

**பேச்சில் வரும் தயக்கம்... எல்லாம் நினைவி**

பயமா?'

கேள்விகளாகப் புரண்டன.

மனம் இருப்புக் கொள்ளவில்லை.

தன்னிடம் பேசுவதில், பழகுவதில் அவனைத் தடுப்பது எது? என்னவென்று புரியாமல் குழம்பினாள்.

'டேய் மண்டு, மூணு வருஷமா என்கூடப் பழகறே... இன்னமும் என் மனசு உனக்குப் புரியலியா? காலேஜ் இன்னும்

'அவசரப்படாதே... ஒருமுறை கூட அவன் நெருக்கம் காட்டிப் பேசியதில்லை. நீ எனக்கு ரொம்ப முக்கியம் என்று தெரியப்படுத்தியதில்லை. அந்தக் கவிதை கூட அவன் நோட்டில் எழுதியிருந்ததுதான். இப்போதும் ரெகார்டை கொடுக்கத்தான் தேடி வந்திருக்கிறான்.

புத்தி எதிர்முனையிலிருந்து பேசியது.

மறுநாள்... கல்லூரிக்கும் அவன் வர



Path Breaking Movie'- அதாவது, வழக்கமான தடத்தை உடைத்து புதுத்தடம் பதித்த படம் என்று தேர்ந்தெடுத்து விருது வழங்கி கௌரவித்திருக்கிறது.

விருது விழாவில், மலையாள சினிமாவில் கூட இப்போது யதார்த்தம் இல்லாமல் போய்விட்டது. 'சுப்ரமணியபுரம்' யதார்த்தத்தை சினிமாவில் கொண்டு வந்த படம். புது இயக்குநர், புது நடிகர், புது முயற்சி இது. கேரளாவில் 100 நாட்கள் கடந்தும் ஓடிய படம். குறிப்பாக இதில் இடம் பெற்றுள்ள 'கண்கள் இரண்டால்' என்கிற பாடல் கேரள மக்களிடம் அமோக வரவேற்பை பெற்ற பாடல்' என்ற அறிமுகத்துடன் விருது வழங்கப்பட்டது.

— சங்கர்

வில்லை.

மாலதிக்கு ஒன்றும் புரியவில்லை; பாடத்திலும் கவனம் செல்லவில்லை.

'ச்சீ போ... அவனுக்குப் பிடித்திருந்தால் என்ன... பிடிக்காவிட்டால்தான் என்ன... என்னால் இந்த டென்ஷனைத் தாங்க முடியாது...'

அந்த பீரியட் முடிந்தது... வேகமாய் எழுந்தாள்.

எழுந்த வேகத்தில் டேபிளில் இடிக்க, ரெகார்ட் நோட் கீழே விழுந்தது. நேற்று வெற்றி கொண்டுவந்த அதே ரெகார்ட்! அதிலிருந்து விழுந்தது ஒரு பேப்பர்; எடுத்துப் பிரித்தாள்...

யோசனையாய் மீண்டும் மீண்டும் படித்தாள்.

சரேலென்று புரிந்தது; வார்த்தைகளின் முதலெழுத்து புரிய வைத்தது; 'மாலதி ஐ லவ் யூ வெற்றி.' விசிலடித்தாள்.

அப்போது செல்போன் ஒலிக்க, எழுந்து வெளியே வந்து எடுத்தாள்.

''மாலு நான் வெற்றி!''

மறுமுனையில் குரல் கேட்டது... தன்னை மீறிச் சொன்னாள்.

''ஹேய்... உன்னை மாதிரி உன் கவிதையும் சூப்பர்!''



## பார்த்தவுடன் அவனிடம் ஏற்படும் பரபரப்பு; ஓடி, 'அவன் காதலிக்கிறான்' என்று கூச்சலிட்டன.

மாறாதது
லட்சியம்! - அந்த
இடமான
ஐயமற்ற
லட்சியங்கள்
வ்யூகங்களாலேயே
வெற்றிபெறுகின்றன.

என்ன இது? ஒன்றும் புரியவில்லையே?

''அப்படின்னா, அதை மு.மேத்தா கிட்டதான் நீ சொல்லணும்''

''அட நாயே... இரு உன்னை... நேரில் வெச்சுக்கிறேன்.''

பல்லைக் கடித்தபடி சொன்னாள்.

''தாலி கட்டித்தானே...''

வெற்றியின் பதிலில் தொனித்த கேலியும் சிரிப்பும் அவளையும் தொற்றிக் கொண்டன.

மருந்தே இல்லாத மருத்துவமாக உதவி செய்து புண்ணியம் கட்டிக் கொண்டதில் ஜீரோ(தெரபி) உண்மையில் ஹீரோதான்!

- எஸ்.முரளி, ஸ்ரீரங்கம்

"ஓய்வெடுங்கள் கலைஞரே!" தமிழருவி மணியனின் கட்டுரை மடை திறந்த வெள்ளம்! கலைஞர் யோசிப்பாரா?!

- இராம.வாணி, திருவாரூர்

'தடா இல்லாத ஜல்லிக்கட்டு' கட்டுரையில், 'தை மாசத்தில் நரி முகத்திலே ஒரு நாள் முழிச்சா வருஷம் பூராவும் நல்லா இருக்கும்' என்று நரி முகத்தில் முழிக்கும் அந்த கிராம மக்களுக்கு அதனால் பலன் கிடைக்கிறதா? என்பது பற்றி கட்டுரையில் ஏதுமில்லையே.

- எஸ்.ராமசாமி, சித்தோட வார சொல்வரசம்.

- இதயா ஏசுராஜ், கல்லக்குடி

"வன்முறைக் காட்சியில் வழக்கறிஞர்கள்" என்ற தலையங்கம் கவலை தருவதாக உள்ளது. நீதித்துறையில், சாதி மற்றும் அரசியல் குறுக்கீடுகள் இருந்தால், என்னென்ன நடக்கும் என்பதை சமீபத்திய உயர்நீதிமன்ற காட்சிகள் உணர்த்திவிட்டது.

- அ.அலீஸ்ஃபாத்திமா, திருச்சி-21

'நெரூர் சௌந்தர்ய நாயகி' படம் சூப்பர்! தெய்வ படங்களை வரைவதற்காகவே, வேதா அவர்கள் பிறவி எடுத்திருக்கிறார் போலும்! வாழ்க வளமுடன்!

- கமலா ராஜசேகரன், பொள்ளாச்சி

"யதார்த்தமான உண்மைகளையும், சமூக பிம்பங்களையும் கல்கிதான் எனக்குக் காட்டியது" என்று கே.வி.ஆனந்த் சொல்லியிருப்பதை படித்த பொழுது 'கல்கி'யின் மேலுள்ள மதிப்பு பன் மடங்கு கூடியது.

- என்.பாலகிருஷ்ணன், மதுரை

# ஆஹா OSC AR ரஹ்மான்!

பொருளுக்கு ஆசைப்படாது தாவரலிபியைச் சுவாசிக்கும் பொம்மி சுதாபாத்திரத்தை கண்முன்னே நிறுத்தியதன் மூலம் 'பூப்போல பொண்ணு ஒண்ணு' சிறுகதை ஆசிரியர் எல்லோரையும் கவர்ந்துவிட்டார்.

- சு.ஸ்ரீகாந்த், நெய்வேலி

இலைகளின் நரம்புகள் வரை பயணம் செய்து மரங்களுக்கான ஒரு காவியமாக இருந்தது தஞ்சாவூர்க் கவிராயரினன் இந்த

'அரசியலும், அதனுள் விரவிக்கிடக்கும் ஜாதி, மதச் சார்பு நிலைப்பாடுகளும் வழக்கறிஞர்கள் கட்டமைப்புக்குள்ளிருந்து களையப்பட வேண்டும். அதுவே முதலும் முடிவுமான தீர்வு'என்ற தலையங்க வரிகள், மிகச் சரியான 'ஜட்ஜ்மெண்ட்' வரிகள்!

- வே.ந.கதிர்வேல், வேலூர்-6

'ஆஸ்கர் ரோஜா' எனும் தலைப்பே ஆஹா ஜோரா இருக்கு! OSC ARரஹ்மானின் புகழுக்கு சூட்டப்பட்ட



உள்ள ஒற்றுமை, வேற்றுமையை அழகான உவமையுடன் உதாரணம் காட்டிவிட்டார் கிரேஸி மோகன்.

**- லலிதா வெங்கடராமன், சென்னை-4**

**சே**ச்சி சரண்யா மோகனின் பேட்டி நன்றாக இருந்தது. ஹோம்லியாக நடிப்பேன் என்று கூறியது பாராட்டத் தக்கது.

**- எஸ்.மீனா, ஸ்ரீரங்கம்**

**கா**வல்துறையில் பணிபுரியும் ஒருவர் தன் கிராமத்தினர் அனைவரையும் யோகாவில் மூழ்க வைத்து, ஊரில் வம்பு தும்பு இல்லாமல் தூய்மைபடுத்தி வருகிறார் என்பதை அறியும்போது 'ஜருகு' ஊரை சாதனை ஊர் என்று பாராட்டத் தோன்றுகிறது.

**- இரா.கல்யாணசுந்தரம், மதுரை**

'**ஆ**ஸ்கர் ஒயில்டு' பற்றி மருதன் அளித்த தொகுப்புரை அந்த மாபெரும் எழுத்தாளரைப் பற்றி மேலும் அறியும் ஆவலைத் தூண்டிவிட்டது.

**- லெ.நா.சிவகுமார், மேற்கு மாம்பலம்**

## ||வட்டமேஜை||

மகுடமான தலைப்பு!

**- த.சத்தியநாராயணன், அயன்புரம்**

**க**மிஷனர் ராதாகிருஷ்ணன் விவரித்திருந்த சாகஸ இரவு காட்சிகள் மிகவும் பரபரப்பாக இருந்தது. அதிலும் அவர் 1986ல் எங்கள் ஊரான திண்டுக்கல்லில் முதலில் ஏ.எஸ்.பி.யாக பதவி ஏற்றது எங்களுக்கு கிடைத்த பெருமை.

**- உமாமோகன்தாஸ், திண்டுக்கல்**

**ஒ**ற்றுமைக்கும் வேற்றுமைக்கும்

'**ரோ**ஜாக்களைப் பற்றி பேசியும் புகழ்ந்தும் அலுத்து விட்டது. தினப்படி வாழ்க்கையில் முட்களுடனே பரிச்சயம் அதிகம் என்பதால்' கவிதைப் படைத்த சுகந்தி சுப்பிரமணியம் பெண் கவிஞர் காலமானது கவிதை உலகுக்கு ஈடு செய்ய முடியாத இழப்பு!

**- இராம.பார்த்திபன், வயலூர்**

உலகப் பொருளாதார உருக்கம் காரணமாக வேலை வாய்ப்புகள் குறைந்து வருகின்றன. இருக்கின்ற வேலையைத் தக்கவைத்துக் கொள்வதே பெரிய சவாலாக இருக்கிறது. எனவே புதிய வேலைக்குக் கடும் போட்டி இருப்பதில் ஆச்சரியமில்லை. படித்து முடித்த எல்லோருக்கும், பெரிய நிறுவனங்களில் கைநிறையச் சம்பளத்துடன் வேலை கிடைக்குமென்று ஆசை இருக்கிறது. ஆனால் டி.சி.எஸ்., யு.டி. மற்றும் பாரதி குழும நிறுவனங்கள் உட்பட பல பெரிய நிறுவனங்கள் படிப்புத் தகுதி, ஆக்கபூர்வமான மனோபாவம் தவிர உளவியல் சோதனையும் (Psychometric test) நடத்துகிறார்கள். மனிதனின் நடத்தை, பல்வேறு குணாம்சங்களைத் தெரிந்து கொள்ள விஞ்ஞானபூர்வமான அணுகுமுறையாக இந்தச் சோதனை கையாளப்படுகிறது. நேரடிப் பேட்டியின் போது வெளிப்படுத்தாத விஷயங்களை, இந்தச் சோதனை மூலம் பெற்று விடுகிறார்கள். மேலும் நேரடிப் பேட்டியின் போது சிலர் பொய் சொல்லும் வாய்ப்பு உண்டு. இந்த உளவியல் சோதனையில் பொய் சொன்னால் கண்டுபிடிக்கப் பட்டு விடுவீர்கள். அதற்கேற்ற முறையில் கேள்விகள் வடிவமைக்கப்படுகின்றன. பதவி உயர்வு கொடுக்கும் போதும், இந்த உளவியல் சோதனை முடிவுகள் உதவி செய்கின்றன. தாங்கள் எடுக்கப் போகிற வேலைக்கு, அந்த நபர் தகுதியானவராக இருக்கிறாரா என்று பார்ப்பதுதான் முக்கியம். விற்பனைப் பிரிவில் வேலை என்றால் அந்த நபருக்குத் தன்னம்பிக்கையும் விடாமுயற்சியும், தயங்காத அணுகுமுறையும் அவசியம். உதாரணமாக, முன்பின் அறிமுகம் இல்லாதவரிடம், அதிரடியாகப் பழகும் மனோபாவம் உங்களுக்கு இருக்கிறதா அல்லது நத்தை போல உள்ளுக்குள்ளேயே சுருண்டு கொள்ளும் மனோபாவம் உள்ளவரா; கண்டுபிடிப்பது சுலபம்.






**'மா.கா.பா' பாண்டியராஜன்**

- பார்ட்டிகளில் நானே வலிந்து சென்று மற்றவர்களிடம் என்னை அறிமுகப்படுத்திக் கொள்வேன்.
- எல்லோர் பார்வையும் படும்படி நடந்து கொள்வேன்.
- மற்றவர்கள் என்னிடம் வந்து பேசும் வரை காத்துக் கொண்டிருப்பேன்.
- பார்ட்டிகளில் என்னால் ஒட்ட முடியவில்லையே

# லை டிடெக்டர் கேள்விகள்!



என்ற ஏக்கம் எனக்குண்டு.

- மிக விரைவாக முன்பின் அறிமுகமில்லாதோரைக் கூட நண்பர்களாக்கிக் கொள்ள என்னால் முடியும்.

இந்தக் கேள்விகளுக்குப் பதில் சொல்வதை வைத்தே நீங்கள் எப்படிப்பட்ட மனிதர் என்பதையும், பொய் சொல்லுகிறீர்களா என்பதையும் கண்டுபிடிக்க முடியும்.

இப்போது உங்களுக்கு நீங்களே சுயமதிப்பீடு செய்து கொள்ள சில கேள்விகள்:

- நீங்கள் பதினெட்டு வயதானவரா?
- சொல்லப்பட்டிருக்கும் வேலைக்கு ஏற்ப கல்வித் தகுதி உண்டா?
- ஷிப்டுகளில், விடுமுறை நாட்களில், ஓவர் டைம் வேலை செய்ய சம்மதமா?
- ஓட்டுநர் உரிமம் வைத்திருக்கிறீர்களா?
- கணினியைக் கையாள்வது உங்களுக்குச் சுலபம் தானே?
- மூன்று மாதம் துவக்க நிலை பயிற்சி ஓ.கே.வா?
- உளவியல் சோதனைக்கு உடன்படுவீர்களா?
- சவாலான சூழலில் மற்றவர்களை மரியாதையுடனும், தொழில்சார்ந்த தர்மத்துடனும் சமாளிப்பீர்களா?
- சட்டத்தை மதிக்கும் பண்பு எனக்குண்டு; நேர்மை என் உடன் பிறப்பு என்கிறீர்களா?
- 'முடிவெடுக்கும்போது என் கருத்து தவிர சம்பந்தப்பட்ட எல்லோர் கருத்தையும் கேட்பேன்' என்கிறீர்களா?
- தடைகளை உடைக்கும் தன்னம்பிக்கை உண்டா?
- குழப்பமான சூழலில் முடிவெடுக்கும் தைரியம் உண்டா?
- குழு மனப்பான்மை உண்டா?
- டார்கெட் வைத்து

ஆயிரத்தில் ஒருவன்

வேலையை முடிப்பவரா நீங்கள்?

- வேறுபட்ட கலாசாரச் சூழலிலிருந்து வந்திருப்பவர்களுடன் ஒருங்கிணைந்து வேலை செய்ய சம்மதமா?

- என்னதான் டென்ஷன், மனச் சுமை அழுத்தினாலும் நிதானத்தைக் கட்டிக் காப்பவரா?

- சவாலான வேலையை எடுத்து, திறம்பட முடிக்கும் முனைப்பு உள்ளவரா?

- சென்னையில்தான் வேலை செய்வேன் என்று அடம்பிடிக்க மாட்டீர்கள் அல்லவா?



**மே**லே சொல்லப்பட்ட பதினெட்டு கேள்விகளுக்கும் உங்கள் பதில் 'ஆமாம்' என்றால் ''யூ ஆர் அப்பாயின்டட்''. பதினான்கிலிருந்து பதினேழுக்கு 'யெஸ்' எனில், ''உங்களுக்குக் கண்ணியமான வேலை காத்திருக்கிறது.'' ஆனால் எந்தெந்தக் கேள்விகளுக்கு 'நோ' என்று பதில் சொல்லியிருக்கிறீர்களோ அதைக் குறித்து சிந்தனை செய்து உங்களை மாற்றிக் கொண்டு வேலைக்குத் தயாராகுங்கள். பதினொன்றிலிருந்து, பதிமூன்று கேள்விகளுக்கு 'ஆமாம்' என்றால், நீங்கள் நேர்மையானவர். எங்கே நீங்கள் சுணக்கமாக இருக்கிறீர்கள் என்பது உங்களுக்கே தெரியும். திருத்திக் கொள்ளுங்கள். பத்துக்குக் கீழே 'ஆமாம்' பதிலா? ''ஐயா.. உங்களை நீங்களே மாற்றிக் கொள்ள வேண்டும். நல்ல பயிற்சியும், வழிகாட்டுதலும் தேவை. உடனே இது தொடர்பான பயிற்சி நிறுவனங்களை அணுகுங்கள். ஓ.கே.வா?''

**(வெளிச்சம் வீசும்)**

எழுத்தாக்கம் : **ஸ்ரீநி**

## பாண்டி 'S BLOG

**உ**லக மகளிர் தினத்தையொட்டி (மார்ச் 8) என் சிந்தனைகள் ஜஷ்வந்திபென் என்பவரைச் சுற்றி வட்டமடிக்கின்றன. ஐம்பது வருடங்களுக்கு முன்னரே பெண்களின் நிலையை மேம்படுத்த முற்பட்டவர் ஜஷ்வந்திபென்.

கணவர் இறந்தபின் கைம்பெண்ணாக வீட்டில் முடக்கப்பட்ட அந்தக் காலத்தில் பெண்களுக்குப் பொருளாதார சுயச்சார்பு இருந்தால் மற்ற எல்லா சுதந்திரங்களும் ஆண்களோடு ஆன சமநிலையும் சாத்தியம் என்று செயல் திட்டத்தோடு களத்தில் குதித்தார். பெண்களுக்குச் சுலபமாகத் தெரிந்த தொழில் அப்பளம் போடுவது. அந்தத் தொழிலை வைத்தே பெண்ணை மேம்படுத்த முடியும் என்று முனைந்தார். தன்னுடன் ஏழு பெண்களைச் சேர்த்துக் கொண்டு, 80 ரூபாய் மூலதனத்தில் அவர் துவங்கியது தான் லிஜ்ஜத் பப்பட். இதன் பொருள் 'ஒளிரும் அப்பளம்'. இன்று நாடு முழுவதும் 82,000 பெண்களுக்கு வேலை வாய்ப்பை வழங்கி சுயகௌரவத்தைக் கொடுத்து வருகிறது லிஜ்ஜத்.

''இன்று 300 கோடிக்கு வர்த்தகம் செய்கிறது லிஜ்ஜத் பப்பட் ஆனால் கொட்டும் பணமழை காரணமாக அவரது வாழ்க்கை முறை ஆடம்பரமாக மாறவில்லை. மும்பையில் ஒற்றைப் படுக்கையறை அடுக்ககத்தில்தான் வசிக்கிறார் ஜஷ்வந்தி. வர்த்தகத் துறையில் இவர் செய்த சாதனைகளுக்காக மாநில, மத்திய அரசின் விருதுகள் நிறைய வந்து குவிந்தாலும், அவற்றால் ஏற்படும் திருப்தியை விடப் பெரிதாக அவர் கருதுவது, அப்பளத்தின் மூலம் வருமானத்தை ஈட்டும் பெண்களின் ஒளிரும் முகங்களைப் பார்க்கும் போது ஏற்படும் மனநிறைவைத் தான். குஜராத்துக்குப் பெருமை சேர்ப்பவர்களில் ஜஷ்வந்தியும் ஒருவர்.



* ஜஷ்வந்திபென்

‘‘தெய்வ நம்பிக்கை என்பது அவரவர் தனிப்பட்ட விஷயம். ஒருவர் கடவுள் நம்பிக்கையாளராக இருப்பதும், பகுத்தறிவாளராக மாறுவதும் அவர்தம் வாழ்க்கை தரும் அனுபவங்களிலிருந்துதான் நடக்கிறது’’ என்று யதார்த்தமாகவும், பக்குவமாகவும் பதிலளிக்கிறார் கலைஞரின் பேரனும் பாடகருமான டாக்டர் அறிவுநிதி.



# “பக்தி எனது சுதந்திரம்!”

**பகுத்தறிவுப் பாரம்பரியம் உடைய குடும்பப் பின்னணி கொண்ட நீங்கள், பக்திப் பாடல்கள் பாடுவது முரண்பாடாகத் தெரிகிறதே?**

இதில் முரண்பாடாகத் தெரிவதற்கு எதுவுமில்லை. பக்தி என்பது எனது தனிப்பட்ட சுதந்திரம். பக்தியை யாரும் யார் மீதும் திணித்துவிட முடியாது. தனியாக உணர வேண்டிய விஷயம். நான் சினிமாவில் பாடுவதற்கு முன்பே ‘அம்மன் கருவறை’ என்ற பக்திப் பாடல் தொகுப்பை வெளியிட்டிருக்கிறேன். ஆரம்பத்தில் சிலருடன் கருத்து மோதல்கள் இருந்தாலும், காலப்போக்கில் சரியாகி விட்டது.

**உங்கள் தாத்தா ரியாக்ஷன் எப்படி இருந்தது?**

தாத்தா எந்தளவுக்குத் தனது கொள்கையில் உறுதியாக இருக்கிறாரோ, அதே அளவுக்கு, தனிமனித உணர்வுகளுக்கு மதிப்பளிப்பவர். எனவே எனது உணர்வுகளுக்கு, தாத்தா தடைபோட்டதில்லை.

**இனி உங்கள் பாதை மருத்துவமா? இசையா?**

என்னுடைய பாதை இசைதான். எங்கள் குடும்பம் இசையோடு தொடர்புடையது. தாத்தா சி.எஸ். ஜெயராமன் வெண்கலக் குரலுக்குச் சொந்தக்காரர். அவர் மறைந்து பல ஆண்டுகளுக்குப் பின்பு இன்றும் கூட பல மேடைகளில் அவரைப் போன்று பாடி மிமிக்ரி செய்கிறார்கள். அந்தளவுக்கு அவரது குரல் இளையதலைமுறையையும் கூட ஈர்த்



## "பக்தியை யாரும் யார் மீதும் திணித்துவிட முடியாது. அது தனியாக உணரவேண்டிய விஷயம்!"

திருக்கிறது. பாட்டி பத்மாவதி கர்நாடக இசைப் பாடகர்.

இசை ஆர்வம் என்பது எனது மரபணுக் களிலேயே இருப்பதாக நினைக்கிறேன். இன்றைய நவீன மருத்துவ உலகம் கூட 'மனம்' தொடர்பான பல்வேறு பிரச்னை களுக்கு நல்ல இசையைக் கேட்கச் சொல் கிறது. என்னிடம் இருக்கும் இசை மருந்தை ரசிகர்களுக்கு இயன்ற அளவு கொடுக்கத் தயாராக உள்ளேன். சிறந்த இசையைக் கேளுங்கள், மனச்சோர்வு நீங்கும். இது இந்த டாக்டர் தரும் டிப்ஸ்.

**இசையில் உங்கள் குரு யார்?**

இசையில் என்னுடைய குரு என் அப்பாதான். நான் முறையாக இசை பயின்றவனில்லை. ஆனால் என் அப்பா மு.க. முத்துவிடம் பெற்ற ஞானம்தான் இன்று என்னை வளர்த்திருக் கிறது. என் அப்பா இசை, பாடல், நடிப்பு என பல துறை களில் வல்லுநர். சந்தர்ப்பச் சூழ் நிலைகளால் அவரால் பெரிய அளவில் பிரகாசிக்க முடிய வில்லை.

**சினிமாவில் உங்கள் முதல் பாடலே ரீமிக்ஸ் - குத்துப் பாட்டாக இருக்கிறதே? இதில் உங்கள் ஒரிஜினாலிடி தெரி யாதே?**

'காதல் வைபோகமே' குத்துப்பாட்டு இல்லை. இன் றைய டிரெண்டில் அந்தப் பாட லைப் பாடினால் எப்படி இருக் கும் என்ற முயற்சிதான் அது. ரீமிக்ஸ் பாடலுக்குப் பாடுபவர் களும் ரீமிக்ஸ் படங்களை இயக்கு பவர்களும் ஒரிஜினாலிடி இல்லாதவர் கள் என்று அர்த்தமில்லை. ரீமிக்ஸ், காலத் தின் கட்டாயம். இளையதலைமுறையின் எதிர்பார்ப்பு.

**உங்கள் தாத்தாவிடம் உங்களைக் கவர்ந்த விஷயம் எது?**

எந்தச் சூழ்நிலையிலும் அவரிடம் நகைச்சுவை உணர்வுக்குக் குறைவேயிருக் காது. இறுக்கமான சூழ்நிலையைக்கூட நகைச்சுவையால் மாற்றி விடுவார். Presence of mind எனும் சூழலுக்கு ஏற்ப முடிவெடுக்கும் திறனும் தாத்தாவுக்கு அதிகம்.

**தாத்தாவிடம் பெற்ற விஷயங்களை வைத்து அரசியலில் இறங்கத் திட்டமா?**

எனது பாதை அரசியல் அல்ல. எனது பாதை என்றென்றும் இசைதான்.

**- ராகவ்குமார்**

# கல்லாங்காய்... கிட்டிப் புள்... கொரியா!

ஸ்ரீபெரும்புதூரைத் தாண்டி ஐந்தாறு கிலோ மீட்டர் சென்றால் இளநீர்க்குளம் என்ற இடத்தில் நிஜமாகவே ஒரு குளம் இருக்கிறது. ஆனால் அதன் தண்ணீர் இளநீர் மாதிரி இனிக்குமா? என்ற கேள்விக்கு அந்தக் குளத்தின் பாசி பிடித்த தண்ணீரைக் குடிப்பது ரிஸ்க் என்ற காரணத்தால் பதில் சொல்ல முடிய வில்லை. எனவே, பாட்டிலில் மினரல் வாட்டர் சகிதம் அங்கே சென்று குளத்தைச் சுற்றி பாதையை சீர்செய்து, வேலி அமைக்கும் வேலையைச் செய்து கொண்டிருந்தார்கள் கொரிய பல்கலைக் கழகத்தின் மாணவ மாணவிகள். ஹுன்டாய் கம்பெனியின் ஏற்பாடு இது. அவர்களது அழைப்பின்பேரில் இளநீர் குளக்கரைக்குச் சென்றோம்.



''வாங்க! வாங்க!'' எப்பிடி இருக்கிங்க?'' ''சௌக்கியமா?'' ''நன்றி'' என்று அந்த மாணவ, மாணவிகள் கொரிய உச்சரிப்பில் தமிழ்ப் பேசி வரவேற்றார்கள். தொடர்ந்து, ''இவை எல்லாம் இங்கே உள்ள கிராம மக்களிடமிருந்தும், பள்ளிப் பிள்ளைகளிட மிருந்தும் நாங்கள் கற்றுக்கொண்ட சில தமிழ் வார்த்தைகள்'' என்று ஆங்கிலத்தில் சொன்னார்கள். அவர்கள் கற்றுக்கொண்ட மற்ற வார்த்தைகள் : வரிசையில் வாங்க, வாயைத் திற, சத்தம் போடக்கூடாது, மற்றும் அக்கா, அண்ணா, அம்மா, அப்பா (கொரிய மொழியிலும் தாய்க்கு அம்மா தானாம்; தந்தைக்கு அப்பாதானாம்; சொல்லி ஆச்சரியப்பட்டுப் போனார் மாணவி சாம்ப்யங்) சிலர் நன்றாக ஆங்கிலம் பேசினாலும், பலருக்கு ஆங்கிலம் இன்னும் ஒரு அன்னிய மொழிதான்.

சிலர் வேலி அமைப்பதற்குத் தேவையான சிமெண்ட் கம்பங்களை பூமியில் பள்ளம் தோண்டி நடுகிற வேலையில் ஈடுபட, இன்னும் சிலர் அங்கே இருக்கும் சின்னஞ்சிறு பிள்ளையார் கோவிலுக்கு வெள்ளையடித்துக் கொண்டிருந்தார்கள். குளத்தை ஒட்டிப் புதிதாக கட்டப்பட்டிருக்கும் கழிப்பறைகளுக்கு சிலர் சுண்ணாம்பு

அடித்துக் கொண்டிருந்தார்கள். சுற்று வட்டப் பாதையை செப்பனிடுவதற்காக கொண்டு வந்து கொட்டப்பட்டிருக்கும் ஜல்லி குவியல் மேலே படுத்து ரிலாக்ஸ் பண்ணிக் கொண்டிருந்தார்கள். இரண்டு மாணவிகள் குவிந்து கிடக்கும் ஜல்லிகளை எடுத்து, மேலே தூக்கிப் போட்டு 'கல்லாங்காய்' விளையாடினார்கள். கொரியாவில் இது பாபுலர் விளையாட்டாம்.

சற்று தூரத்தில் சிலர் கிட்டிப்புள் ஆடிக் கொண்டிருந்தார்கள். "இந்த விளையாட்டை எங்கே கற்றுக் கொண்டீர்கள்? என்று கேட்டால், "இது எங்கள் நாட்டில் பாரம்பரிய மான 'சார்சிகி' விளையாட்டாக்கும்" என்கிறார்கள்.

"ஹூண்டாய் கம்பெனி கொரியாவில் சமூக சேவைக்காக ஏற்படுத்தியுள்ள தன்னார்வலர்கள் அமைப்பு "ஹேப்பி மூவ்". இதன் மூலமாக கொரியப் பல்கலைக்கழகத்தில் படிக்கும் மாணவ, மாணவிகளை சமூக சேவையில் ஈடுபடுத்துகிறார்கள் என்று விளக்கினார் இந்த சமூக சேவை பணிக்கு பொறுப்பாக இருக்கும் 'ஷின் ஜேமின்' என்ற கொரியா ஹூண்டாய் இன்ஜினியர்.

இந்தியா வந்திருக்கும் 200 பேர்களில் மருத்துவம் படிக்கும் மாணவ மாணவிகளும் உண்டு. சில உள்ளூர் டாக்டர்களின் உதவியுடன், இவர்கள் சுற்றுவட்டாரத்து கிராமங்களில் மருத்துவ முகாம்கள் நடத்தினார்கள். அப்போது அவர்கள் கற்றுக் கொண்ட தமிழ் வார்த்தைகள்தான் "வரிசையில் வாங்க, வாயைத் திற, சப்தம் போடக் கூடாது, இழுத்து மூச்சு விடுங்க' போன்றவை.



பள்ளிகளிலும், கிராம மக்கள் முன்னிலையிலும் கொரிய கலை நிகழ்ச்சிகளை நடத்தியதுடன், நம் ஊர் மாணவ மாணவிகள் நடத்திய தமிழ்நாட்டு பாரம்பரிய கலை நிகழ்ச்சிகளையும் ரசித்தார்கள்.

"அதெல்லாம் சரி! இந்தியா குறிப்பா சென்னை அனுபவம் எப்படி?" என்றதற்கு அவர்கள் சொன்ன பதில்கள்...

"எங்கே பார்த்தாலும் ஜனங்க, ஜனங்க, ஜனங்க தான், யம்மாடி!"

"உங்கள் ஊரில் மாடுகள் ஜாஸ்தி!"

"நீங்கள் ரொம்ப அதிகமாக பிளாஸ்டிக் கவர்கள் உபயோகிக்கிறீங்க. அது தப்பு."

"உங்கள் ஊர் குழந்தைகளோட கண்கள் ரொம்ப கியூட்!"

"உங்களுக்கு சுத்தம் பத்தின உணர்வு கொஞ்சம் குறைவுதான்!"

"மகாபலிபுரம் போயிருந்தோம். வாவ்! ஃபன்டாஸ்டிக்!"

"போன வருஷம் நான் வந்தேன். சென்னை ரொம்பப் பிடிச்சு போச்சு. அதனால மறுபடியும் வந்திருக்கேன்."

"இட்லி தோசை வெரி நைஸ்!"

**- எஸ். சந்திரமௌலி**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 09 -11 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 09 - 11* Registered as a Newspaper in Srilanka.